

# பெரிய ஹதீது

# மாணிக்க மாலை

*

காயல்பட்டணம்

**காமில் ஒலி ஸாம் ஷிஹாபுத்தீன் நாயகம்**

அவர்களால் இயற்றப்பட்டது

*

வெளியிடுவோர்:

**ஸாம் ஷிஹாபுத்தீன் ஒலியுல்லா(ஹ்)**

கந்தூரிக் கமிட்டி

அப்பாபள்ளித்தெரு, காயல்பட்டணம்

1949



# முன்னுரை

குறள் வெண்பா

மாலை யகற்றும் மதியம்போல் ஸாமோலி
மாலை யகற்றும் மலம்

## காயற்பட்டணம்

இற்றைக்கு 1100 வருடங்களுக்கு முன் உண்டான பழம் பெருமை வாய்ந்த இக் காயலின்கண் அறிவிலும் அமலிலும் (செயல்) சிறந்து பூரணச் சந்திரன்போல் தோன்றிய பல பெரும் பெரும் மகான்களுள், ஹிஜ்ரி 1000-ல் தோன்றி யழியாப்புகழ் படைத்து விளங்கி, இவ்வூர் மரைக்கார் பள்ளிவாசலில் ஹிஜ்ரி 1079 றபீவுல்அவ்வல் பிறை 19 செவ்வாய்க்கிழமை சமாதி பூண்டிலங்கும் ஹலரத் ஷெய்குஸுலைமான் ஒலி நாயகம் அவர்களை யும் அவர்களின் அருந்தவத்தால் வந்த இணையற்ற கல்விக் கடலாகிய பஞ்ச ரத்தினங்கள்போன்ற ஐந்து மக்களையும் அறியா தாரில்லை. அவர்களில் இவ்வூர் சிறிய நயினர் பள்ளிவாயலில் ஹிஜ்ரி 1092 துல்கஃதா பிறை 6 திங்கட்கிழமை சமாதி பூண்டிலங்கும் ஹலரத் ஷெய்கு ஷம்ஸுத்தீன் ஒலி நாயகம் (1), நாகூரையடுத்த மஞ்சக் கொல்லையில் அடங்கி விளங்கும் ஹலரத் ஷெய்கு அஹ்மது ஒலி நாயகம் (2), கீழக்கரை குத்பா பள்ளியில் ஹிஜ்ரி 1115 ஸபர் பிறை 5 வியாழக்கிழமை யடங்கி விளங்கும் ஹலரத் மாதிஹுர் றஸூல் ஷெய்கு ஸதக்கத்துல்லாஹ் ஒலி நாயகம் (3), இவ்வூர் அப்பா பள்ளிவாயலில் ஹிஜ்ரி 1121 றஜபுப் பிறை 21 ஞாயிற்றுக்கிழமை சமாதி பூண்டிலங்கும் ஹலரத் ஷெய்கு ஸாம் ஷிஹாபுத்தீன் ஒலி நாயகம் (4), களக்காட்டையடுத்த ஏறுவாடி யில் ஹிஜ்ரி 1098 துல்ஹஜ்ஜு பிறை 15 சனிக்கிழமை யடங்கி விளங்கும் ஹலரத் ஷெய்கு ஸலாஹுத்தீன் ஒலி நாயகம் (5), ஆக இவ்வைந்து மாணிக்கங்களும் இவ்வூரிலேயே பிறந்து கல்வி கேள்விகளிற் றேறியுள்ளார்கள்.

முதல் மகனும் நான்காவது மகனும் இவ்வூரிலேயே மணந்து வாழ்ந்து மறைந்துள்ளார்கள். இரண்டாவது மகன் காரைக்கால் போனவிடத்து, அங்கு மணந்திருந்து, அதையடுத்த மஞ்சக் கொல்லையில் மறைந்துள்ளார்கள். மூன்றாவது மகன் இவ்வூரி லேயே மணந்து வாழ்ந்திருந்து, கீழக்கரை சென்றவிடத்து, அங்கு காயற்பட்டணத்திற் பிறந்து சிறுவயதிற் கீழக்கரைசென்று குடியேறி சேதுபதியால் மந்திரியாகுமளவும் ஆதரிக்கப்பட்டு, பல வியாபாரத்திலும் ஈடுபட்டுப் பெரும் செல்வந்தராகவும் கொடைவள்ளலாகவும் விளங்கிய சீதக்காதி மரைக்காயர் அவர் களும் அவர்களது தாயாரும் அன்னாரை நன்கு மதித்து ஆதரித்து வந்தமையால் விட்டுப்பிரியா நேசத்தால் அங்கிருந்தே மறைந் துள்ளார்கள். ஐந்தாவது மகன் ஏறுவாடி சென்ற இடத்து, அங்கு மணந்திருந்து மறைந்துள்ளார்கள்.

இந்நாதாக்களியற்றிய பல்லாயிரக்கணக்கான புகழ் கவி மாலைகளும் பல அருமையான கிரந்தங்களும் கல்விக் களஞ்சிய மென யாராகிலும் கொண்டாடப்பட்டு கையேற்கப் பட்டதும், மற்றும் பல அற்புதங்களும் எங்கும் நன்கு தெரிந்ததே. அவற்றை விவரிக்கிற் பல்கும். அதற்கென்று சமயம் கிடைக்கிற் றருவாம்.

நிற்க, அவ்வைந்து மாணிக்கங்களில் நான்காவது மகனாகிய ஷெய்கு ஸாம்ஷிஹாபுத்தீன் ஒலிநாயகம் அவர்களை எம் பெருமானார் நபிநாயகம் (ஸல்) அவர்கள் விளித்து, 'மார்க்க அறிவுகளை யாவரும் அறியும் பொருட்டு, தாய் பாஷையில் பாமாலைகளாகப் பாடுமெ'னக் கூறியதைச் சிரமேற்கொண்டு, சில அறபுகிதாபுகளை அப்படியே பூரணமாக மொழிபெயர்த்துப் பாடி யும், நம்மனோர்க்கு அவசியமும் அவசரமாய் அறியவேண்டிய கடமையுமாகிய அகீதா, ஹதீது, பிக்ஹு, மஸ்அலாக்கள் முதலியவற்றைப் பல அருமையான அறபு கிரந்தங்களிலிருந்து தேடித் தெரிந்து, அறபுப் பதங்களுக்குப் பிசகாத தமிழ்ப் பதங்களைப் பிரயோகப்படுத்தி, சாமான்ய ஜனங்களும் எளிதில் உணரக்கூடிய முறையில் எளிய தமிழ் நடையில், எதுகைமோனை கெடாமல், எண்வகைப் பொருளமைப்போடு, எழுவாய் பயனிலை குன்றாது, உவமான உவமேயங்களில் யாரும் வியக்கத் தக்க பல அடைமொழிகளின் இனிமையால் நிறையப்பெற்ற கவியாக

ஆயிரம் பாமாலைகள் இயற்றியுள்ளார்களென்பது கர்ண பரம்பரை. அவற்றுள் சிற்சில மாலைகள் பலராலும் அச்சிடப்பட்டிருக்கின்றன. இன்னும் பலமாலைகள் மறைந்துள்ளன. எஞ்சிய மாலைகள் அறபுத் தமிழில் சிலகிதாபுகளில் மட்டும் வரையப்பெற்று ஏட்டுப் பிரதிகளாகவிருக்கின்றன.

அவற்றை மேற்படி ஸாமொலி நாயகம் கந்தூரிக் கமிட்டியார் ஒவ்வொரு வருஷமும் ஏன்ற மட்டில் அச்சிட்டு வெளிப்படுத்துவ தென நிச்சயித்து, தம் பெருமுயற்சியால் சென்ற இரண்டு வருஷங்களாக இரு புத்தகங்கள் வெளிப்படுத்தியுள்ளனர். அதே போன்று இவ்வருடமும் வெளிப்படுத்துவான் முனைந்து, அம்மாலை களுள் "பெரிய ஹதீது மாணிக்க மாலை" யெனும் நாயக வாக்கிய மாகிய ஆயிரம் ஹதீதுகளை சுமார் ஆயிரத்திருநூறு பாடல்களாகக் கொண்ட மிகப் பெரிய மாலையை வெளிப்படுத்தியுள்ளார்கள். மாலைகளில் இதுபோன்று அருமையான பெரிய மாலை கிடையாது.

அம் மூலப் பிரதிகளை நாங்களும் எங்கள் நண்பர்களாகிய பல உலமாக்களும் கவனித்து, ஒவ்வொரு ஹதீதையும் தேடி யெடுத்து, அதற்குள்ள பதப்பொருளையும் இதோடு ஒத்துப் பார்த்ததில், பாக்களிலுள்ள பொருளும் கருத்தும் அணுவும் பிசகாத சுவையான தமிழ்ப் பதங்களில் மிக மிகப் பொருத்த மாய்ப் அமைந்திருப்பதைக் கண்டு களிப்புற்றோம்.

இப்படிச் சிறந்த அறபி மொழிபெயர்ப்பாளர் ஒருவரைக் காணமுடியாது. அதிலும், பிறபாஷையை அப்படியே மொழி பெயர்த்துக் கவியாகப் பாடுவது மிகவரிது. ஏனென்றால், கவி யாகப் பாடும்போது சொற்சுவை பொருட்சுவை கருதியும், உவ மான உவமேயங்களை நாடியும், எதுகைமோனையை உத்தே சித்தும், ஓசை நிரப்பவும், பல சொற்களை கூட்டி ஆளவேண்டி வருவது சகஜம். அதனால் பொருள் வேறுபடவும் போதும். அதுகொண்டு நாயக வாக்கியம் சிதைவுபடுவதும் திண்ணம். அப்படி இம்மாலையில் யாதொன்றும் காணாததுபற்றி ஆனந்திக் கின்றோம். அந்நாயகத்தின் மனதிலும் வாக்கிலும் ஆண்டவனின் அருளும் றஸூல் நாயகத்தின் கிருபையும் நிலவியிருக்கும்போது ஏன் அப்படி இருக்காதென்பதே துணிபு.

ஆனதால் இத்தகைய மேன்மையான கிரந்தத்தை எல்லா ஒவ்வொரு முஸ்லிமாகிய ஆண் பெண் சகோதர சகோதரிகளும் கவனித்து ஆசையோடு தங்களுக்காகவும் தங்கள் குடும்பத்தினர் களுக்காகவும் பல பிரதிகளை வாங்கிப் படித்து, இகபர பிரயோ ஜனத்தைப் பெற்றுக்கொள்வீர்களாக! எந்த முஸ்லிமும் இதை வரவேற்காதிருக்க மாட்டான்.

இப்பணிவிடைக்கு முதற்றேவையான பணச்செலவைக் கவனித்துப் பொருளுதவிசெய்த தருமகுணசீலர்களை யாரும் மறக்கமுடியாது. அவர்களின் நன்முயற்சியில் ஆண்டவன் அருள் பாலிப்பானாக! ஆமீன்.

இக்காரியத்தில் தளராச் சிந்தையோடு உழைத்துவரும் கமிட்டியார்களின் இந்த முயற்சியிலும் அவர்கள் சொந்த முயற்சி யிலும் ஆண்டவன் பலனளிப்பானாக! ஆமீன்.

இதை யச்சிட்டு வெளிப்படுத்தப் பலவகையாலும் உதவி புரிந்த எம் சகோதரர்களுக்கும் இந்நன் முயற்சியில் எங்களோடு பெரும் பங்கெடுத்து அச்சிட்டுத்தந்த வளர்பிறைபோன்ற ஹிலால் பிரஸின் சொந்தக்காரர்களாகிய எங்கள் அன்புக்குரிய நண்பர்களுக்கும் ஆண்டவனினருளும் எங்கள் நன்றியறிதலும் என்று முரித்தாகுக. வஸ்ஸலாம்.

பா. சு. முஹம்மதப்துல்லா லெப்பை
நஹ்வி செ. யி. முஹம்மதிஸ்மாயீல்





# பெரிய ஹதீது மாணிக்கமாலை

## வெண்பா

வானும்புவி யேழும் வரிசைஅற் ஷும்குற்ஸும்
தானமுட னேபடைத்த தக்கோனே ஈனமில்லா
மவ்லா நபியுடைய வண்மைஹதீ தின்மாலை
* கவ்லா லுரைத்திடவே காப்பு.

---

(1) ஏற்றமுள ஆதி நாமங் கொண்டும்
இலங்கும்நபி ஸலவாத்துக் கொண்டும்
பார்த்து தெளிந்துயான் இற்ஷாதிலும்
பார மிகவுள்ள இஹ்யாவிலும்.

(2) சீர்த்தியணுகிய ஜவாஜிரிலும்
சிறப்பான துர்றுல் மன்தூரிலும்
கோத்து தெரிந்துயான் ஹதீத்மாலை
கூறியுரைத்திட குதாய் துணையே.

(3) அத்தீக்கு வுமறுதுமான வியார்
அண்ணல் ஹஸன் ஹுஸைன் அஸ்ஹாபிமார்
வெற்றியுடை யோர்கள் பறக்கத்தினால்
விண்ணேழமைத்தோனே யுதவி செய்வாய்.

(4) மீரான் முஹ்யித்தீன் பறக்கத்தாலும்
பிஸ்தாமி ஷெய்கு ஹுர்மத்தாலும்
சீராம் ஜுனைதுதம் பறக்கத்தாலும்
ஷிப்லியெனும் ஷெய்கு பொருட்டினாலும்

---

* கவ்லால் = சொல்லால்.

(5) நேரான ஸஹ்லு பறக்கத்தாலும்
நீதிபிஷ்றுதம் ஹக்கினாலும்
பேராம் ஒலிமார்கள் பறக்கத்தாலும்
பேணியுரைத்திடத் துணைச் செய்வாயே.

(6) தேசமடங்கலும் துலங்கவந்த
ஷெய்கு சுலைமான் பறக்கத்தாலும்
தாஜுமுடியான மக்களுட
சங்கை பறக்கத்தால் உதவி செய்வாய்.

(7) வையம்தனிலுள்ள நல்லோர்கள் தம்
வண்மை ஹுற்மத்தால் ஹதீதின்மாலை
பொய்யொன்றணுகாமல் உரைத்திடவே
புவியே மமைத்தோனே துணைச் செய்வாயே.

(8) கனவுதனில் கண்டேன் ஒருவர்வந்து
கல்லா யுரைத்திட்டா ரென்னுடனே
கனதியுள இந்த கிதாபுதன்னைக்
கவியாய்த் தமிழுரை செய்வாயென்றே.

(9) மண்ணுலுறைதன்னில் பொன்னால் வாளை
வாகாய்ச் செலுத்தின பரிசுபோல
திண்ணமணுகாத புன்சொல்லினால்
சிறப்பாம் ஹதீதுரை செப்புவேனே.

(10) ஆதி வஹ்யினால் நபிமொழிந்த
அழகாம் ஹதீதான மாணிக்கத்தை
நீதமுடன் கேட்டு அமல் செய்வோர்க்கு
நீதிநபி மன்றாட்டுண்டாகுமே.

(11) ஹதீதால் நாற்பது பாடமிட்டு
கனமாய் அதின்படி நடக்கலுற்றால்
அதிகமுள உலமாக் கூட்டத்தில்
ஆவாரெனச் சொன்னார் ஆலநபி.

(12) அவர்கள் தனக்குயான் மன்றாட்டங்கள்
ஆகிறம் தனில் செய்வேனென்று
மவ்லா நபியுரைத்தா ரெனவே
வரிசை அபுத்தர் தாவுரைத்தார்.

(13) பீஸபில்காரர் கூட்டந்தனில்
பேணிப் பிடித்தோர் களாவாரென
வாச நபியுரைத்தாரெனவே
வரிசைஇப்ன் உமற் உரைக்கலுற்ருர்.

(14) எந்த வாசலாலும் சுவர்க்கம்
இனிதாய்ப் புகுதுங்கோ ளென்றுரைக்க
அந்தமுடன் சொல்லப்படுமெனவே
அழகாம் இப்னுமஸ்வூ துரைத்தார்.

(15) நாற்பது ஹதீதறிந்தவர்க்கு
நலமாக இந்த வரிசையுண்டாம்
கூர்ப்பாய் ஆயிரம்ஹதீதுசெப்ப
குவலயம் தனிலுள்ளோர் கேளீர்.

(16) எல்லா அமல்களும் கருத்துக்கொண்டு
இருக்குமவரவர் தங்களுக்கு
அல்லாஹ் கொடுப்பானே வணங்குங்கோளென்
றருளினுரெங்கள் ஆலநபி.

(17) உங்கள் வேசத்தை வெளிஅமலே
உடையபெரியவன் நோக்கானுங்கள்
சங்கையுள கல்பைப் பார்ப்பானென
தம்பிரான்நபி சாற்றினரே.

(18) வணக்கந்தனைக் கொண்டு துன்யாதன்னை
வருடி விருப்பமாய்த் தேடினேர்கள்
மணக்கும் சுவர்க்கத்தின் வாடையேற்க
மாட்டா ரெனச்சொன்னர் வண்மைநபி.

(19) தன்கோபம் தன்னைத் தட்டிக்கொண்டால்
தம்பிரான் கோபம் தட்டுண்ணுமென்
றங்கமழகான நபி சொன்னரென்
ருனதப்ருனி யருளிச்செய்தார்

(20) தேனின் மதுரம் கத்தாளையினல்
திரியும் பரிசுபோல் ஈமானெறி
தீனைக்கெடுக்கின்ற கோபத்தினல்
தீருமெனச் சொன்னர் சீமாநபி.

(21) ஹஸதையுடையோர்கள் கோளுடையோர்
கத்தன்முனிவான குறியுடையோர்
அசையா சுவர்க்கத்திலாகாரென
அருளினுரெங்கள் ஆலநபி.

(22) நபித நடக்கையை அகன்று விட்டு
நாட்டம் தனக் கொற்றபடி நடப்போர்
புவியிலுள காபிர் தங்களிலும்
பொல்லார் மிகக் கெட்ட காபிரென்ருர்.

(23) அமர்த் திதனைக்கொண்டு ஏற்றுவார்கள்
அல்லில் வணக்கமும் பகல் நோன்புமாய்
திருத்த மறவிருப் போர் தராஜா
தீரான் முனிவன்றி அமைந்தோர்களே.

(24) மறுமை தனிலும் இம்மை தனிலும்
மன்னர் பொறுமை யுள்ளோர் களென்றும்
பொறுமை யுடையோர்கள் நபிதராஜா
பொதிவா ரெனச் சொன்னுர் பெருமானபி.

(25) புவியி லுளபேர்க்கு இரங்கா தார்க்கு
புர்கா னிறக்கினே னிரங்கா னென்ன
நபிமார் அடங்கட்டும் அரசாய் வந்த
நல்ல முஹம்மது நபி யோதினுர்.

(26) குற்றம் பொறுக்காத பேர்களுக்கு
கோமான் பொறுக்கா னென்றுரைத்தா ரெங்கள்
சத்த மழகான நபி யிறஸூல்
சங்கையுள யார்கள் தங்களுடன்.

(27) சிறியார்க் கிரங்காத பெரியோர்கள் தாம்
சிறப்பாம் வரிசை வையாச்சி சுக்கள்
குறிகேடனுகியே செய்வோர் நம்மில்
கூண்டமனு உம்மத் தல்ல வென்ருர்.

(28) சீதேவி யானேர் அவர்கள் கல்பில்
சிறப்பாம் கிருபை யுண்டா யிருக்கும்
மூதேவி யானே ரிரக்க மில்லா
மோச மணுகிய பேர்களென்ருர்.

(29) ஒருத்தன் ஒருவன் குற்றம் மறைத்தால்
உடையோன் அவன் குற்ற மடங்கலையும்
உருகும் கியாமத்து நாளதிலே
உலகர் தனைவிட்டு மறைப்பா னென்றார்.

(30) வல்ல வொருவன் பால்ஒரு முஃமினை
வரிசை கெடுக்கப்பட்டா லுதவி
நல்லபடி செய்தா னில்லை யாகில்
நாளை கியாமத்தில் லோகர் காண.

(31) தொல்லை மிகப்படுவா னென்வே
துலங்கு அற்ஷினில் சென்று வந்த
அல்ல லணுகாத நபி இறஸூல்
அமிர்த மணி வாயால் அருளிச்செய்தார்.

(32) தன்னை அலங்கரித் தொரு மனிதன்
தரை மேல் மதிப்பாக நடக்கயிலே
மன்னன் பெரியவன் முனி வாகவே
வாங்கின னவன் றனைச் சுரிய.

(33) இன்னம் அவன் புவிதனிற் சுரிய
ஏறி யிறங்கிப் போறு னென்வே
கன்னல் மொழி செப்பும் நபியிறஸூல்
கனத்த களரியில் கவல லுற்றார்.

(34) கடுகுமணி நிறை பெருமை யுள்ளார்
கனகப்தி சொற்கம் புகுதாரென்ன
முடுகும் மனிதரையா தரிக்கும்
முஹம்மது நபி மொழியலுற்றார்.

(35) வம்பாம் மனிதரை கியாமத்து நாள்
வல்லான் எழுப்புவான் தர்றத்துப்போல்
துன்பமிக வுள்ள வம்பன் தன்னை
சூழும் மஹ்ஷரி லுள்ள பேர்கள்.

(36) இன்பமுடனேறி மிதிப்பாரென
எங்கள் முஹம்மது நபி இறஸூல்
அன்பாயுரைத்தா ரென்றிமாம் முஸ்லிம்
அழகாம் கிதாபினில் அருளிச்செய்தார்.

(37) தன்னை மதிப்பது எழுபதான்டின்
சங்கையுள அமல்தனைப் போக்குமென்
றுன்னும் மனதினி லுதிப்பறியும்
உடையோன் வஹ்யினல் நபியோதினர்.

(38) பெருமைத்தனம் விட்டும் களவை விட்டும்
பெருத்த பலாயான *தைனை விட்டும்
பிரிந்து மவ்தானல் ஆகிறத்தில்
பிர்தவ்ஸெனும் சொற்கம் கிடைக்குமென்ருர்.

(39) மிஸ்கீன் உடன் கூடியிருங்கோள் நீங்கள்
வெறுப்பாய் பெருமை விட்டகலுமென
மிஸ்கு மணம் வீசும் நபிஇறஸூல்
விருப்ப முளயார்களோ டுரைத்தார்.

(40) அடியாருடன் அன்னம் புசிப்பவரும்
ஆடு கறப்போரும் கடை செல்வோரும்
கொடிய பெருமை விட்டகன்ருரென
கூறினு ரெங்கள் பெருமானபி.

(41) ஏற்றமுள்ள ஆடை தன்னைவிட்டால்
இறைவன்தனை நாடி தாட்சியாக
போற்றலுள சொர்க்கத் துகிலிவர்க்கு
போர்த்தப்படுமென நபி மொழிந்தார்

(42) பொல்லாக் குணமுள்ளார் சொர்க்கம்தன்னில்
புகுதாரென் வெங்கள் நபியிறஸூல்
அல்லாஹ் வஹ்யினு லுரைத்தாரென்
ஆலிம் திர்மதி யருளிச்செய்தார்.

(43) தேனின் மதுரத்தை ஸிர்கா வினம்
தீர்க்கும் பரிசுபோல் துர்க்குணங்கள்
ஆனஅமல் தன்னை அழிக்குமென
அஸ்கரீயிமாம் பேசி வந்தார்.

(44) நல்ல அழகான குணமுடையோர்
நாளை கியாமத்தில் நபிதமக்கு
அல்ல லணுகாத அருகரென்ன
அழகாம் உலமாக்கள் அருளிச்செய்தார்.

---

* தைன் = கடன்

(45) முஸ்லிம்தனைக் கொண்டு பொல்லா வெண்ணம்
மோசமனுகியே நினைத்த பேர்கள்
அசையாப் பெரியோனை ஆகா வெண்ணம்
அகத்தில் நினைத்தோரென் றருளிச்செய்தார்.

(46) தன்னை மதிப்போர்கள் தன்தீன்கொண்டு
ஷர்ருனவும்மத்தாகு மென
மின்னத்துளநபி பகர்ந்தாரென
மேலான ஷெய்குதா முரைத்தார்.

(47) கொடுத்த ஸதகாவை யுரைப்பவனும்
கொடுக்காபகீலனும் சதிசெய்வோனும்
அடுக்கான் சுவர்க்கத்தில் புகுதானென்ன
அஹ்மதிறஸூ லுல்லாஹ் வுரைத்தார்.

(48) எழுந்ததுர்ப் புத்தி தனைப்பயந்து
இருங்கோ ளெனவெங்கள் நபியிறஸூல்
தெளிந்தவுரையாக வுரைத்தாரென்ன
ஷெய்குஷாஜெனும் பேருரைத்தார்.

(49) தனியேஸபர் செய்வோர் தானமிடார்
தனித்து அசனஞ் செய்வோர் பயலே
முனிவாயடிப்போர்கள் தீங்கரென்ன
முஹம்மது நபி மொழியலுற்றார்.

(50) தீனைக்கெடுத்து துன்யா வருந்தும்
தீதர்மிகத் தீங்கராவாரென்ன
தேனைவடுவாக்கும் சொல்லுடையோர்
செம்மல் முஹம்மதுநபி செப்பினர்

(51) முனிவாம்துன்யாவை மிகவெடாமல்
முயன்றுஸபராளி போலாகவே
சனியாம்துன்யாவிலிருங்கோளென
சங்கையுள வெங்கள் நபியோதினர்.

(52) ஆடை பழயதாய்க் கிழிந்ததென
அகற்றிகளைய வேண்டாம் ஆயிஷா
மூடும் அண்டையாற்றைத்துடென
மொழிந்தார் முஹம்மது நபியிறஸூல்.

(53) ஈமான் தனில் முந்தவந்தவர்க்கு
ஏற்றமகளான ஆயிஷாவை
சீமான் தனமான பேருடனே
சீராயுறவாடி இராதேயென்றார்.

(54) ஆதிமுக நாடும் அறிவுகொண்டு
அழியும்துன் யாவை நாடினேர்கள்
ஏதம்வெளியாகும் கியாயமத்து நாள்
எற்றார் சுவர்க்கத்தின் வாடையென்றார்.

(55) மனிதர் முகம் தன்னை தன்னளவில்
வாகாய்த் திருப்ப வென்றேதினேரை
முனிவாய் இறைவன் கியாமத்து நாள்
முந்தநரகத்தில் தள்வானென்றார்

(56) தனக்கு வெளியான அறிவு தன்னை
சாற்றுமெனக் கேட்டபேர்களுக்கு
சினத்து வெளிப்படுத்தாத பேர்க்கு
தீரும் கியாமத்து நாள்தனிலே.

(57) கனத்த கடிவாளம் நெருப்பினலே
கத்தன் அவன் வாயில் பூட்டுவானென்
றனர்த்த மணுகாத நபி சொன்னரென்
ருலிம் இப்னுமஸ்வூதுரைத்தார்.

(58) மனிதர்தனில் பெரல்லாமனுவாகினேர்
வண்டவுல மாக்களாகுமென்ன
கனமாயுரைபேசும் நபியிறஸூல்
கனதியுளயார்க ளோடுரைத்தார்.

(59) ஏகும் கியாமத்து நாள்தனிலே
ஏற அதாபுள்ளோர் இல்மைக்கொண்டு
வாகாய் அமல்செய்யாரென வுரைத்தார்
வள்ளல் முஹம்மதுநபி யிறஸூல்.

(60) மூன்றுவகையாரை கண்குறைய
மொழிந்தோர் முனிபிகென்றாரிறஸூல்.
நீண்ட வயதானோர் அறிவுடையோர்
நெறியாய் பதியாளும் ஸுல்தானுமே.

(61) அறிவுதனைத் தேடி வழிநடந்தால்
அழகாய் அவனுக்கு சுவர்க்கவழி
குறியாய் குறையாதென்றுரைத்தாரெங்கள்
கோஜா முஹம்மது நபியிறஸூல்.

(62) வரிசை அபூதர்ரேடுரைத்தார் நபி
*பாபாலொரு பாபு இல்ம்படிக்கில்
பிரிசமுடன் ஆயிரம் றக்ஆத்
பேணித்தெழுவதில் ஏற்றமென்றார்.

(63) காலம்பெறப்பள்ளிவாசல் வந்தால்
கருதி அறிவோதிப்படிப் பித்திடல்
கோலம் பெறகபூல் ஹஜ்ஜுடைய
கூலி கிடைக்குமென்றிறஸூல் சொன்னார்.

(64) ஏற்றமுள்ள இல்மை படிக்கவென்று
எழுந்து பிறப்பிட்டோர் பீஸபீலில்
மாற்றமுள காபிர் தங்களுடன்
வாளாற் பொருதினோர் போலாமென்றார்.

(65) அறிவுதனைத் தேடிக் காலம் பெற
அழகாய் எழுந்தோர்க்கு சொர்க்கவாசல்
திறமாய்த் திறந்திடுமென வுரைத்தார்
சிங்காரமான நபியிறஸூல்

(66) பெருத்த பெரும்பாவம் தனிற்பெரிய
பிரியாப் பெரும் பாவந்தனிலாமென்றார்
கருத்தாயுரைப்பது, நான் சொல்லாத
ஹதீதாம்வகை யொன்றை யுரைத்தே னென்றே

(67) வல்லவொரு அமல் நடப்பித்தோர்க்கு
வாகாயதன் கூலியும் பிறகு
‡கல்லையறச் செய்வோர் கூலிகளும்
கனமாய்க் கிடைக்குமென்றாரிற ஸூல்

(68) ஆலிம் இருப்பது தீன் தனக்கு
அமளிமுஸீபத்துக் குறையுமென்ன
ஆலம்தனிலுள்ளோர்க் கரசாய் வந்த
அழகாம் முஹம்மதுநபி யோதினார்

* பாபு=பாடம். ‡ கல்லை=பிணக்கு.

(69) வல்லவொருகபீலாக் கூட்டங்கள்
மவ்த்தாயிறப்பது மிகவெளிதாம்
நல்லவொரு ஆலிம் மவ்த்தாய் மண்ணில்
நலமாய் மஸிறவது வருத்தமென்றார்.

(70) நான் சொல்லா ஹதீதானவையை
நவின்றேனெச் சொன்னோரிருப்புத்தலம்
ஊண் சீழொலித்தோடும் நரகத்திலே
உண்டாக்கினு னென்றார் வுண்மை நபி.

(71) மார்க்கம் தனிலில்லாக் கருமங்களை
வாகாய் வெளியாக்கும் பேர்கள் மேலே
ஆர்க்கும் இறையான பெரிய நாயன்
அமளில ஃனத்துச் செய்வானென்றார்

(72) கூடும் ஜமாஅத்தை விட்டோ ரொட்டை
குறி கேடனுகியே பிரிந்தோர்கள் தான்
நாடும் இஸ்லாமின்வலையை விட்டு
நகன்றாரென செப்பி நவின்றார் நபி.

(73) நபி தன்நடவடிவிட் டவனை
நாயன் களாவை பொய்யாக்கினேனை
புவிவா னமைத்தவன் முனிவானென்ன
பூற்கான் முஹம்மது நபியோதினர்.

(74) நேராம் வழிப்பாட்டில் வரிசையான
நெறியாம் வழிப்பாடு அஹ்மது தன்
சீராம் வழிப்பாடென் றுரைத்தா ரெங்கள்
சீமான் முஹம்மது நபியிறஸூல்.

(75) வழி கேடனுகிய பித்அத்துகள்
வையம் தீனிற்செய்தோர் தங்களுடன்
மொழியும் தவ்பத்துக் கூடாதென
மொழிந்தார் முஹம்மது நபியிறஸூல்.

(76) பித்அத்துக்காரர் அமலை ஆதி
விரும்பி கபூலாக்கானென்று நபி
விதமா யுரைத்தா ரென்றுரைத்தா ரெங்கள்
மேலாம் அஸ்ஹாபி உபையென்பவர்.

(77) ஆகாவுல மாக்கள் அவர்களாலே
அழிவார்கள் எந்தன் உம்மதெனச்
சாகானுரைப்படி யுரைத்தா ரெங்கள்
சங்கை முஹம்மது நபியிறஸுல்.

(78) கலியாண மென்னும் நிகாஹ்தன்னில்
கடிந்தபித் அத்துக்காரியங்கள்
பெலமாய் நடக்குது அதைவிலக்கல்
பெரியபற் ளென்றூர் வுலமாக்கள்மேல்.

(79) அவர்களுடன் கூடி உலமாக்களும்
ஆகா நடக்கையில் ஆனாராயின்
மவ்லா முனிவான பாஸிகுமாய்
வண்டன் இப்லீஸின் தொண்டனுமே.

(80) தப்பு தவில்தாரை இதுபோலொற்ற
சங்கை புரோஜன மில்லாவகை
மெய்ப்பாய் கூலிகொடுத் தழைக்க
விலக்காம் ஹறுமென்றூர் வுலமாக்களே.

(81) வீணினுடமையை யழிப்போர்கள்தான்
வீணன் இப்லீஸின் உடப்பாமென்ன
ஊணித்திரையில்லாப் பெரிய நாயன்
உண்மை நபிக்குத்தானுரைக்க லுற்றான்.

(82) தீனின்வழியன்றி ஊண் தீனன்றி
சிறப்பாம் கலையன்றி செலவழிப்பு
ஈனமுள வீணென்றுரைத்தா ரெங்கள்
இம்மைதனிலுள்ள வுல மாக்களே.

(83) மஹ்றம் தனையன்றி மற்றுள்ளபேர்
மாப்பிள்ளை கையை பெண்ணின் கையை
தகுமாய் பிடித்துத்தான் கொடுக்கிறது
சங்கை அணுகாத ஹறுமாகுமே.

(84) பெண்ணு மாணுமா யொருதலத்தில்
பிரிசமுடன் கூடி நிற்கிறது
ஒண்ணாது ஹறுமென வுரைத்தார்
உலகந்தனிலுள்ள வுலமாக்களே.

(85) எண்ணத் தொலையாதபித் அத்துகள்
*இவடம் தனிலுள்ள கலியாணத்தில்
கண்ணால் தெரிசித்தோமென வுரைத்தார்
கலைசேர் அறபினிலுள் ளோர்களே.

(86) கருபுநடத்து மாப்போல் நடத்தும்
கலியாணக் கூட்டந்தன்னில் கூடி
சராளம் வருவோர்க்குலனைத் தென்ன
ஷறபாம் உலமாக்கள் செப்பினரே.

(87) செய்ய ஹறாமான கருமங்களை
சிந்தை மகிட்சியாய்ப் பார்க்கிறது
ஐயமற ஹறாமென்று ரென
அருளினு ரெங்கள் வுலமாக்களே.

(88) பந்தற்கால் நாட்ட ஹறாமாமென
பகர்ந்தார் வுலமாக்கள் எதுக்கென்றால்
முந்தவுரைத் திட்ட ஹறாமுக் கெல்லாம்
மூடாயிருந்ததின் படியினுலே.

(89) உந்தன் மனதுக்கு பிடிபடவே
உவமையுரைக்கிறேன் ஹறாம் செய்வோர்க்கு
சிந்தை மகிழ்ச்சியாய் குச்செடுக்க
திறமாய் ஒருகாலை நாட்டு மாப்போல்.

(90) எந்தவகையான ஹறாமுக் கெல்லாம்
இலக்காய் சபபாகும் கருமமெல்லாம்
அந்த மணுகாத ஹறா மெனவே
அருளினு ரெங்கள் வுலமாக்களே.

(91) எல்லா மிறைகளா வென்றறிந்து
ஈமான் அகத்தில் வையாரமல்கள்
அல்லாஹ் கபூலாக்கா னென்றுரைத்தார்
அண்ணல் முஹம்மது நபியிறஸூல்.

(92) நன்மைகளாவினில் அவன் பொருத்தம்
நறையும் பூவும் போலென வறியும்
தின்மைகளாவினில் அவன் முனிவு
தீயும் சூடும்போலாகு மென்றார்.

* இவடம் = இந்தியா.

(93) ஆண்டான் தனைக்கொண்டே செயல்களெல்லாம்
அடியான் தனக்கொரு செயலில்லை யென்
றீண்டு மனத்தினு லுரைத்த பேர்கள்
இஸ்லாம் தனைக்கெடுத் தோர்களாமே.

(94) கண்ட வகையான கருமங்களை
கற்பனை யென்று கவலுவோர்கள்
வென்றியுள வேதம்தனைத் தூதரை
வீணென் றுரைத்திடும் யூதர்களே.

(95) என்பேர் ஒருத்தன் பாலுரைக்கலுற்றால்
இனிமையுடன் ஸலவாத் தெனக்கு
அன்பா யுரையாமலிருந்தால் சொர்க்கம்
அழகாம் பெரும்வழி யிழந்தானென்றார்.

(96) என்பெயர்தனை நினைத்தொருவன் நூறு
ஏற்ற முளஸலவாத் தோதினல்
இன்ப சுவர்க்கத்தில் ஷுஹதாவுடன்
ஏறுவானென்ன நபி யோதினர்.

(97) எந்தன் உம்மத்திலொரு மனிதன்
எனக் குஸலவாத்து ஒருக்கால் சொன்னல்
அந்தமுள நாயன்பத்து நன்மை
அழகாயவனுக்கு கொடுப்பா னென்றார்.

(98) மனிதர் தனில்மிகஷர் ருயினோர்
வையம் தனிலுள்ளபேர்கள் தன்னை
அநியாயம் கொண்டு பயப்படுத்தும்
ஆகா மனிதர்களாகு மென்றார்.

(99) நாணமெனும் ஹயா ஈமானென்றும்
நல்ல முஹம்மதுநபி சொன்னரென்
றுணித்தரளம்போல் ஹதீது செப்பும்
ஆலிம்திர்மதீ யருளிச் செய்தார்.

(100) பொன் வெள்ளிப் பாத்திரந்தனிலே
பொருந்திக் குடித்தபேர் திண்டபேர்கள்
துன்பமுள பெருந்தழல் நெருப்பை
தொண்டைதனில் தீற்றிக் கொள்வாரென்றார்.

(101) பொன்னால் வெள்ளியால் பல்குத்திகள்
புகுதும் செவிதோண்டி சுருமாக்கோல்கள்
அன்னாள் தொடுத்தின்னாள் ஹறாமெனவே
அருளினாரெங்கள் உலமாக்களே.

(102) படை ஆயுதமன்றியுள ஆலத்தில்
பகாமுள வெள்ளிபொன் பதிக்க
கொடிய ஹறாமாகுமென வுரைத்தார்
குறானின் உரைபேசும் வுலமாக்களே.

(103) பட்டயம்மற்ற ஆயுதத்தில்
பகாமுள்ள ஆடைபூட்டிறது
கெட்ட ஹறாமாகுமென வுரைத்தார்
கீர்த்திமிகவுள்ள இமாம்ஷாபியீ

(104) குறானைப் படித்தபின் மறந்தபேர்கள்
கூடும் கியாமத்தில் வருவாரவர்
குறைநோய் பிடித்தவர் போலாமென
கொந்தாரநபி கூறலுற்றார்.

(105) ரூபிசு இமாம் மற்றுள்ளபேர்
நல்லகுறானோதிபின் மறக்கல்
கோபமுள பெரும் பாவமென
குஷியாம் கிதாபினி லுரைக்கலுற்றார்.

(106) குறானில் விலக்கான கருமங்களை
குறித்துத்தவிறா மல்இருந்தபேர்கள்
உறாமல் அதற்கீமான் கொள்ளாரென
உண்மை முஹம்மது நபியோதினார்.

(107) கூலிவாங்கினோர் குரான் தனக்கு
குவலயம்தனில் நன்மைகளை
கோலம்பெற வாங்கிக்கொண்டாரென்ன
குதாய் பால்வழக்கேறுமென வுரைத்தார்.

(108) வேதம்தனையோதி பிழைக்கும் பேர்கள்
மேலாம் கியாமத்து நாள்வருவார்
காதுக்கிடையான வதனமெல்லாம்
கடிந்தவெலும்பா மென்றி றஸூல் சொன்னார்.

(109) ஆற்றங்கரைதனில் வெளிக்கிருந்தோர்
அவர்கள் தமக்காதி லக்ஷணத்துடன்
வற்றமுளஉம்பர் முனிவுமென
எங்கள் முஹம்மது நபியோதினர்.

(110) முழுக்கில் ஒருமுடி நனையாவிட்டால்
முடியா நெருப்புச் சென்ற வருடலே
அழிக்குமெனச் சொன்னர் நபியப்போது
அலியார் தலைமுடியரிந் தெறிந்தார்.

(111) ஆதி பெரியோனுக்கச்சமர்க
அழகாக்குங்கோளுங்கள் முழுக்கையென
நீதிநபி யுரைத்தாரெனவே
நிகழ்த்தினு ரெங்கள் தப்ருனியார்

(112) நீரிலிறங்கும் போதன்நேரத்தில்
நீழமுள பருமுறியுடுத்து
சீராயிறங்குங் கோளென வுரைத்தார்.
திங்கள் முஹம்மது நபியிறஸுலில்

(113) ஹம்மாம்தனில் சென்று பெண் பிறந்தோர்
கருதிகுளிப்பது ஹறுமென்னவே
துன்மார்க்கமில்லா நபியிறஸுலில்
தொகுத்தாரெனச் சொன்னர் இமாம் ஷாபியீ.

(114) மாதவிடையான மாதருடன்
வாகாய்ப் புணர்ந்தோர்கள் குறுன் தனக்கு
நீதமணுகாத காபி ரென்ன
நிகழ்த்தினு ரெங்கள்நபி யிறஸுலில்.

(115) தொழுகைதனை விட்டோர் நினைவாகவே
தோசமணுகிய காபி ரென்ன
ஒளிவாம் முஹம்மது வுரைத்தா ரென
வுண்மை இமாம்தப்ருனி சொன்னர்.

(116) நலமாம் தொழுகையை விட்டோர் நாமம்
நாறும் நரகத்து வாசலின் மேல்
பெலமாய் எழுதப்பட்டிருக்கு மென்ன
பெருமான் முஹம்மதுநபி யோதினர்.

(117) முதலும் குடும்பமும் இழந்தவர் போல்
முழிப்பார் தொழுகையில்லார் நாளையென்
றதிபர் முஹம்மது சொன்னா ரென்ன
ஆலிம்பைஹகீ யருளிச் செய்தார்.

(118) வலிய தொழுகையை விட்ட பேர்கள்
வணக்க மடங்கலுமழியு மென்ன
அலியார் மாமனாருரைத்தா ரென்ன
ஆலிம் இஸ்பஹான் என்போர் சொன்னார்.

(119) தொழுகைதனை விட்டோர் காபி ரென்று
தூய்ய நபியுல்லாஹ் சொன்னா ரென்ன
தெளிவாம் இஸ்ஹாகும் சொன்னா ரென்ன
ஷெய்கு முஹம்மது நஸ்ற் செப்பினார்.

(120) வரிசை அலிஅபுத்தர் தாஜாபிர்
வன்மையுள அய்யூ பென்வரும்
பிரிசமுள்ள நல்ல தொழுகை விட்டு
பிரிந்தோர் பெருங்காபி ராகுமென்றார்.

(121) ஏற்றமுள்ள இஸ்லாம் தனக்கு
இலங்குமடையாளம் தொழுகை யென்ன
சாற்றினார் நபி யென வுரைத்தார்
சங்கை இப்னு நஜ்ஜாறு என்போர்.

(122) நாளை கியாமத்தில் முதற் கேள்வியாய்
நாயன் கணக்காகக் கேட்கும் கேள்வி
வாழும் தொழுகை யென்றுரைத்தா ரென்ன
வரிசையுள ஆலிம் நஸயி சொன்னார்.

(123) பெரியோன் திருவுளமுள தொழுகைப்
பேணா ஷைத்தான் தன் வதனம் தன்னைப்
பிரியாக் கரியாக்குமென வுரைத்தார்
பீரு தைலமி வுரை பேசினார்.

(124) எல்லா அமலிலும் உகப்பாகிக்கு
ஏதென்றுமற் கேட்டபோதுரைப்பார்
எல்லை வக்த்துடன் தொழுகை யென்ன
இஸ்னாது செய்தார் பைஹகியே.

(125) தொழுகை தனை நெகிழ்ந்திருக்குமது
தோஷம் தனில் பெரும்பாவமென்ன
தெளிவாயுரை பேசும் இமாம் முஸ்லிம்
செப்பினரென்றார் வுலமாக்களே.

(126) தொழுகை * நெகிழ்ந்தோரைக் காபிரென
சோரி வெளியாக்க ஆமெனவே.
தெளிவாயுரைத்தோரில் சிலர் நாமத்தை
செப்பினர் நல்லவுல மாக்களே.

(127) உமறு அலி அப்துர் றஹ்மான் ஜாபிற்
உண்மை அபுத்தர் தசமஆதும்
திமிராம் அபூஹுறைறாவவரும்
சேர்ந்த இப்னு அப்பாஸவரும்.

(128) இப்னு மஸ்ஊது மிவர்களன்றி
ஏற்றமுள யார்கள் மிகுதியுண்டு
புவியில் இமாமான ஹன்பலியும்
போற்றல் இஸ்ஹா குறுஹவியும்.

(129) இப்னு முபாறகும் இப்றுஹீமும்
ஏற்றமுள ஹகம் ஆபூபக்ரும்
நவமாம் அறிவுள்ள அபூதாவூதும்
நல்ல இமாம்ஜுபைறும் அய்யூபும்.

(130) இவர்கள் தனையன்றி மற்றுமுள்ள
எல்லா இமாம்களும் உலமாக்களும்
மவ்லா வணக்கத்தை விட்டோர்களை
வண்மை யணுகாத காபிரென்றார்.

(131) ஸுஜூது றுகூஉயும் நிரப்பாமலே
தொழுவோர் இஸ்லாமில் சாகாரென
குஷியாய் ஹுதைபாவும் பிலாலவரும்
கூறினர் கூண்டக் களரிதனில்.

(132) தன்தன் முடியோடு பிறமுடியை
சங்கையெனச் சேர்ப்போர் தங்களுக்கும்
அந்தம் தனக்காய் பல் அராவுவோர்க்கும்
ஆதிலஃனத் தென்று ரிறஸூல்.

---

* நெகிழ்தல் = விட்டுப் பிரிதல்

(133) மேனிதனைக்கீறி பச்சைப் பொட்டு
விருப்பமுடன் போடும் பேர்களுக்கும்
ஜீனத் தலங்காரப் புருவரோமம்
திறமாய்க் களைவோர்க்கும் லஃனத்தென்றூர்.

(134) தொழுகைதனக்கு நிற்போர்கள் முன்பால்
தோச நடையாக நடப்பதிலும்
தெளிவா னநூறு ஆண்டுநிற்க
சிறப்பாமெனச் சொன்னூர் சீமானபி.

(135) ஏதொன் றளவிலோர் மனிதர்நின்று
இனிதாய்த் தொழுகையில் ஒருவர்வந்து
நீதமணுகாமல் முன் னடந்தால்
நெஞ்சுதனைத் தள்ளிவிடுங் கோளென்றூர்.

(136) அதுக்கு மசையாமல் நின்றுனெனென்கில்
அவனை ஷெய்த்தானென் றறிந்துகொண்டு
கதிக்ககொலை செய்ய ஆமெனவே
கலைசேர் இமாம்புகாரி யுரைத்தார்.

(137) ஜமா அத்துடன்கூடித் தொழும் தொழுகை
தனித்து தொழுவதி லிருபத்தேழு
நிமாஜில் அதிகமாமென வுரைத்தார்
நெறியால்மிகுந்த நம் நபியிறஸூல்.

(138) குருடரொருவர் நம் நபிபால்வந்து
கோஜாவே யெனக்காமோ தொழ
கருவாம் பைத்தினி லுன் னளவில்
கனதியுளபாங்கு கேட்குமோ வென்.

(139) றுரிமை முஹம்மது நபிகேட்டபோ
துரைத்தார் அழகாக கேட்குமென்றே
குருவாம் நபி யுரைத்தாருமக்கு
கூடித்தொழ விதியாகு மென்றே.

(140) ஜமாஅத்துடன் கூடிதொழான் ஜூம்அத்தை
சாற்றினூரிவனி ரிராப் பகலும்
நமாஜூம் நோன்புமா யிருந்தாலுமாம்
நரகமெனச் சொன்னூர் இப்னுஅப்பாஸ்.

(141) இய்யம்தனைக் காதில் ஊற்றுவது
எளிதாம் அதான்பாங்கை கேட்டுக்கூடி
துய்யஸலாத் தில்லாதிருப் போரென
சொன்னார் அபூஹுறைறை றுழிவென்பவர்.

(142) பள்ளிதனக்கயலான பேர்கள்
பள்ளிதனையன்றி தொழுதாரெனில்
மெள்ளத்தவஞ் செய்த தொழுகையெல்லாம்
வீணாயழியு மென்றார் அலியார்.

(143) ஸுப்ஹுதனில் இஷாத் தொழுகைதனில்
துரிஸ்தாய் இமாமுடன் தொழாதவரை
கவனுமுரையினால் முனாபிகென
கவல்வோ மெனச் சொன்னார் இப்னு உமற்

(144) மூன்று வகையார்கள் தொழுந்தொழுகை
முடுகும் செவிக்காது தன்னைவிட்டு
தாண்டியுயரா தென்றுரைத்தாரெங்கள்
சங்கை முஹம்மதுநபி யிறஸூல்

(145) நாயன் தனைவிட்டு ஒழித்தவனும்
நலமாம் புருஷனை வெறுத்தவளும்
தூயமுஃமீன்கள் பொருத்தமில்லா
துன்மையனாகிய இமாமுமாமே.

(146) ஸப்புதனைச் சேர்ந்து தொழுவோர்களை
தம்பிரான் சேர்ப்பான் கிருபை கொண்டு
தப்பிஅகன் றோரைத் தம்பிரானும்
தப்புவானென்றார் நபியிற ஸூல்

(147) வரிசையிமாமுக்குமுன் தலையை
வாகாயுயர்த்தினோன் தலையைநாயன்
பரிவாய்கியாமத்தில் நாய்த்தலை போல்
புடைப்பானெனச் சொன்னார் பயகாம்பரே.

(148) தலையைப் பணிப்போர்கள் உயர்த்தினோர்கள்
சங்கைஇமாமுக்கு முன்அவர்கள்
பெலமாய் முன்னெற்றி தன்னை ஷெய்த்தான்
பிடித்தங்கிழுப்பானென்றி றஸூல் சொன்னார்.

(149) தொழுகைதனில் நின்று இடவலங்கள்
தோஷமணுகியே பார்க்குமது
குழுவன் இப்லீஸ்இ ருஞ்சலென
கூறினுரெங்கள் கோமானபி.

(150) தொழுகைதனில் நின்று திரும்பிப்பார்த்தால்
தொழுகைதனே ஆதிகபூலாக்கானென்
றழகாம்நபி சொன்னுரெனப் பேசினுர்
அண்ணல் இமாம்தப்ருனியென்போர்.

(151) பெண் கோலம் கொண்ட ஆண்களையும்
பேதையாண் கோலம் கொண்டாளையும்
மண்ணில்தனிஸபர் செய்வோரையும்
வல்லான் லஃனத்துச் செய்வானென்றூர்.

(152) வண்மையணுகாத குறிபார்க்குதல்
வல்லபெரியவன் தனக்கிணை யென்
றுண்மை நபி செப்பினுரெனவே
ஓசையிப்னுமஸ்வூது சொன்னுர்.

(153) சாத்திரஞ் சொல்வோரிடத்தில் வந்து
சங்கையாய்க் கேட்டு விசுவதித்தோர்
ஏற்றமுள குறுன் தனக்கு ஈமான்
இனிதாய்க்கொள்ளாத காபிரென்றூர்.

(154) கேட்டு விசுவாசம் கொள்ளாவிட்டால்
கிருபையுடன் நாலுபத்துநாளில்
வேட்டலுடன் செய்த வணக்கமெல்லாம்
வீணுமெனச் சொன்னுர் நபியிறஸுல்.

(155) நாற்பதுநாளாய் அவன் தவத்தை
நாயன் கபூலாக்கானென நவின்றூர்
கூர்ப்பாய் அதை விசுவாசம்கொண்டால்
குறிகேடனு கியகாபி ரென்றூர்.

(156) குறிணைய விசுவாசம் கொண்டபேர்கள்
குறிகேடனுகிய காபிரென்று
அறியும் ஸஹாபாக்கள் உலமாக்களும்
ஆலநபி சொன்னுரெனச் சாற்றினுர்.

(157) மூன்று ஜும்அத்தை உதாசினமாய்
முறித்தோன் அகத்தில் முத்திரைபோடுவான்
ஆண்டபெரியவன் என்றிறஸூல்
அருளினு ரெனஹாக்கிம் சொன்னுர்.

(158) மூன்று ஜும்அத்தை முடையின்றியே
முடுகான் முனபிகென்று ரெனவே
தூண்டா விளக்கொளி போலுதித்த
துய்ய இப்னுஹிப்பான் உரைத்தார்.

(159) மூன்று ஜும்அத்தை முடைட்யின்றியே
முடிக்காதவன் மேலேயொருதீனுறு
கூண்டவிதியிடம் இல்லை அரை
கொடுக்கவிதி யென்றுர் நபியிறஸூல்.

(160) பள்ளிவாசலில் தோள் கடந்து
பரிவாய் நடக்கின்ற போர்கள்தன்னை
கொள்ளி யெரிகின்ற நரகத்துக்கு
குறித்தஸிருத் தாக்கப்படுமே யென்றுர்.

(161) வளைந்த களரியினடுவிலேறி
வண்மையணுகாமல் இருக்கின்றோனை
குளிர்ந்தவுரை பேசும்நபி யிறஸூல்
கோமான் லஃனத்துச் செய்வானென்றுர்.

(162) இருவர்க்கிடையிலே விடையன்றியே
இருக்கத்தகுமல்ல வென்றிறஸூல்
அருமை மணிவாயால் உரைத்தாரென
ஆலிம் அபூதர்று அருளிச்செய்தார்.

(163) துனியா தனில்பட்டு வுடுத்தபேர்கள்
துய்யபதி சொற்கம் புகுதாரென
கனிவாய் மலர்ந்துரைத்தா ரெனவே
கருணையிப்ன் ஜுபை றுரைக்கலுற்றுர்.

(164) வங்கிசம் தன்னில் வடுச்சொல்வதும்
மவ்த்தான பேர்மேல் ஒப்பாரிகள்
சங்கையணுகாமல் சொல்வதுவும்
தள்ளுண்ணும் குபிர்தாஞகுமே.

(165) ஒப்பாரி சொன்னோர் நரகத்திலே
ஊளையிடுவார்கள் நாய்போலென
செப்பமுள நபியுரைத்தாரென
செய்குதப்ருனி யுரைக்கலுற்றார்.

(166) அழுகை தனைக்கொண்டு செத்தோர்களை
அதாபு செயப்படும் குழியிலென
ஒளிவாம் முஹம்மது வுரைத்தாரென
உண்மையுள இமாம் முஸ்லிம்சொன்னார்.

(167) பிள்ளைமவ்த்தானோர் ஸப்று செய்தால்
பிரியாதிருக்கின்ற நரகம்விட்டு
தள்ளொண்ணுக் கோட்டையாகுமென
சங்கை முஹம்மது நபியுரைத்தார்.

(168) உகப்பாம் மனிதர்கள் மவ்த்தானுக்கால்
உடையோன் களாவென ஸப்றுசெய்தால்
பகைப்பில்லாப் பதிதனில் மாளிகை
பாரபைத்துல் ஹம்தவர்க்கா மென்றார்.

(169) சிறிய பிராயத்தில் இறந்தபிள்ளை
சிறப்பாய் தாய்தந்தை கைபிடித்து
குறையா சுவர்க்கத்திற் செல்லுமென
கோஜா முஹம்மது நபியோதினார்.

(170) இப்னுஉமற் பிள்ளை யிறந்தபோது
இனிதாய் முறுவல் செய்தாரப்போது
கவ்மாம்மனுவேதுக் கென்றபோது
கள்ளன் இப்லீஸை வெல்லவென்றார்.

(171) முஸ்லிம் தனக்கொரு முள்ளுத்தைத்தால்
முன்னேயொரு தறஜாக்கொடுப்பான்
பிசகாம் பிழைதனில் ஒருபிழையை
பெரியோன் பொறுப்பானென்று ரிறஸூல்

(172) தருத்தி யிரும்பிலுண்டாம் கறையை
துய்தாகப் போக்கும் பரிசுபோலே
ஜுரத்தால் பிழையெல்லாம் போமெனவே
சுல்த்தான்முஹம்மது நபியோதினார்.

(173) செத்தபேர்களின் என்புதன்னை
தீங்காய் முறிப்பது ஹயாத்துடனே
சத்தியுடன் முறிக்கும் போலெனை
சாற்றினர் எங்கள் நபியிறஸூல்.

(174) நெருப்புத் தழலின் மேலிருக்குமது
நேராய்கைறுகும் கப்றின் மேலே
இருக்குமதிலென்றார் நபி யிறஸூல்
என்றே யிமாம் முஸ்லிம் உரைத்தார்.

(175) பட்டயம்தனில் நடக்குமது
பரிவாய் கைறுகும் கப்றுதனில்
கெட்டநடையாக நடப்பதென்றார்
கிருபைமிகவுள்ள நபியிறஸூல்

(176) கட்டி நெருப்பிலே நடக்கிறது
கடிந்தவுகப்பாகும் கப்றுதன்னில்
தட்டிமிதிப்பது ஹறுமெனவே
சாற்றினர் ஸலவாத்துநபி.

(177) கப்றில் இருப்போனைக் கண்டு நபி
கடிந்து இறங்கெனப் பின்னுரைத்தார்
புவியில் ஒடுங்கினோரை வருத்தம்
பொல்லாங்கணுகியே செய்யாயென்றார்.

(178) கப்றுதனைக் காண போம்வல்லியை
கருணைமுஹம்மது முனிந்தாரென
இப்னுஅப்பாஸு வுரைத்தாரென
இப்னுஹஜர் உரைத்தார் கிதாபில்.

(179) தந்தம்முதலுக்கு ஜகாத்திறுமல்
சங்கையணுகாமல் இருப்போர்கள்தான்
முந்தநரகத்தில் வீழ்வாரென
மொழிந்தார் முஹம்மது நபியிற ஸூல்

(180) ஜக்காத்தளியாமல் இருந்த முதல்
சாகும் கியாமத்தில் பாம்பாய் வந்து
ஹக்கன் அருட்படி கடிக்குமென
காவல் முஹம்மது நபியோதினர்.

(181) நாலு காரியம் இஸ்லாம் தன்னில்
நாயன் பற்லாக்கினை திலே.
கோலம் பெற மூன்று கொடுவந்தாலும்
கூடாதெனச் சொன்னர் கோமானபி.

(182) வரிசைத் தொழுகையும் ஜகாத் தளிப்பும்
வலிமையுள நோன்பும் மக்கந்தனில்
பிரிசமுடன் ஹஜ்ஜு செய்கிறதும்
பேணியுரைத்திட்ட நாலுமாமே.

(183) ஜக்காத்தளிப்பது இஸ்லாமுக்கு
ஷறபான பாலமாமெனவே
சக்காமுரை பேசார் சொன்னரென
தப்ருனி ஷெய்குவுரைக்கலுற்ருர்.

(184) பொன்னுலுள பூணாரம் பூட்டினல்
பூட்டுவானவன் தனக்கிறைவன்
மின்னி யெரிந்திடும் தழலேயென்று
வீரர் முஹம்மது நபியோதினர்.

(185) வெள்ளி வளை கண்டார் நபியிறஸூல்
பீவி ஆயிஷா கைதனிலே
அள்ளி கொடுப்பாயோ ஜகாத்திதுக்கென்
றருளினரப்போ இல்லை யென்ருர்.

(186) அப்போதுரைக்க லுற்ருருனக்கும்
அழலாம் நரகுக்கும் இது போதுமென்
றெப்பமுள நபி சொன்னரென
உண்மை ஜவாஜி ரிலுரைக்க லுற்ருர்.

(187) சொன்னமெனும் பொன்னுல் தெறிப்பு போட்டால்
துலங்கும் நெருப்பினல் தெறிப்பு நாளை
மன்னன் பூட்டுவானென வுரைத்தார்
வரிசை முஹம்மது நபி யிறஸூல்.

(188) இறுக்கமெனும் பகீலன் அதனில்
ஏகானெனச் சொன்ன ரிறஸூலென
அறிவுமிகவுள்ள இமாம் கதீபு
அவர்தன் கிதாபினில் அருளிச்செய்தார்.

(189) லேசுபடுத்தினோர் கடனுளியை
நெறியாம் கியாமத்து நாள்தனிலே
வாசமுள அர்ஷின் னிழலில்
வல்லானிருத்துவானென நவின்றூர்.

(190) ஆயமெனும் சுங்கக்காரர் நாளை
அழகாம் சுவர்க்கத்திலாகா ரென
தூய முஹம்மது சொன்னூரென
தோழர் யூஷகு வுரைக்கலுற்றூர்.

(191) முடுமைத்தன மன்றி வாங்கி தின்போர்
முனிவாம் நரகத்தின் தழல் நெருப்பை
குடலிலருந்தினூரென வுரைத்தார்
குணத்தால் அழகான நபி யிறஸுல்.

(192) ஒருவரிடத்திலும் ஒரு வஸ்துவை
உகப்பாகக் கேளேனென்ற பேர்க்கு
விருப்பமுடன் வார்த்தைப்பாடு சொன்னூல்
பிஹ்ஷ்தாம்பதிக்கு யான் பிணையாமென்றூர்.

(193) பீவிமார்களை வெளியிற் போக
விரும்பினோர்கள் தான் தாய் தந்தையை
தாவிமனது நோவித்தோர்களை
தையல் தனிலாண் கோலங் கொண்டோரையும்

(194) நாவால்கொடை பேசும் பேர்களையும்
நாற்றமுள கள்ளுக் குடித்தோரையும்
பாவியிவர் அஞ்சு பேர்களையும்
படைத்தோன் முனிவாக பார்ப்பானென்றூர்.

(195) விலகத் தகுமல்லாப் பண்டங்களை
வெளியாக்குமென கேட்டளவில்
உலகந்தனிலுள்ளவுப் பெனவும்
உதகமெனும் நீரு மென்றூர் நபி.

(196) மூன்று காரியம்தனில் மனிதர்
முண்டாமல் கூட்டாவார்களென
வாண்ட மனையிலுண்டாம் நெருப்பும்
மாஉவெனும் நீரும் உப்புமாமே.

(197) மூன்றுலொரு வஸ்து முஸ்லிமுக்கு
முயன்று கொடுத்தவரோரடிமை
கூண்டவுரிமை விட்டாரெனவே
கொடையால் பெருநபி கூறலுற்றார்.

(198) மனிதரிவனுக்கு செய் நன்றியை
வன்மையுட னறிந்தால் படைத்தோன்
கனமா யிவனுக்குச் செய்நன்றியை
கருத்தா லறிந்தவனகு மென்றார்.

(199) ஒருவனொரு தனுக்குதவி நன்றி
யுறுதியுடன் செய்தா லதைநினைத்து
பிரியமுடன் துஆச்செய்தோர் நன்றி
பேணி யறிந்தானென்று ரிறஸூல்.

(200) நன்றி மஃறூபு செய்தபேர்க்கு
நாவால் துஆச்செய்தால் கைறுமென்றும்
வென்றியுடன் செய்தால் அவனன்றியை
விருப்பமுட னறிந்தானே யென்றார்.

(201) ஆதிதனைக் கொண்டு ஆணையிட்டு
அழகா யொருத்தன்பால் ஒருதன்கேட்டால்
நீதமுடன் கொடா திருந்தவர்க்கு
நீதிலஃனத்தென்றாரி றஸூல்.

(202) ஈத்தம்பழநிறை ஹலாலுடமை
எளிய மிஸ்கீனுக் கீந்தாலப்போ
தேற்றுவானென்ன மின்கரத்தால்
எங்கள்முஹம்மது நபியோதினர்.

(203) வல்லவொரு அடியானிரப்பின்
வாசல்தனைத் துறந்தால் இறைவன்
கல்லையணுகிய மிடிவாசலை
கடுகத்திறப்பானென்று ரிவர்க்கே.

(204) தானமெனும் ஸதகாத்தோசத்தை
தண்ணீர் நெருப்பை நூற்கும் பரிசாய்
தானமுட னழித்திடுமெனவே
சங்கை நபியிறஸூல் செப்பினர்.

(205) ஆதிமுனிவான கோபம்தன்னை
அழிக்குமது ஆகாச்சாவு தன்னை
நீதியுடன் தட்டுமென வுரைத்தார்
நெயினார் முஹம்மது நபியிறஸூல்.

(206) நன்றியறியானை நாய னானை
நாயின் இனம்போலே மிருகம்போலே
பன்றிபோல் நாளை யெழுவானென
பகர்ந்தார் முஹம்மது நபியிறஸூல்.

(207) நாளை மஹ்றஷரில் கொடை குடையாம்
நலமா மனிதரில் கொடையளித்தோர்
நீழல்தனில் நிற்பார் கணக்குக்கேள்வி
நெறியாகக் கேட்குமளவுமென்றார்.

(208) மிஸ்கீன் தனக்கொரு கலைகொடுத்தால்
மேனிதனிற் கலைகிடக்குமட்டும்
பிசகில்லா நாயன் காவலிலே
பேணியிருப்பானென்றாரிறஸூல்.

(209) இல்லான் தனக்கொரு ஆடையீந்தால்
ஏகன்சுவர்க்கத்தில் பச்சைத்துகில்
அல்லாஹ் கொடுப்பா னென்றுரைத்தாரெங்கள்
அண்ணல் முஹம்மது நபியிறஸூல்.

(210) பசித்த முஸ்லிம்கள் தனக்கொருத்தன்
பசியாற்றினானெனில் சொற்கக்கனி
முசிப்பும் சலிப்புமில்லாப் பெரிய
முதலோன் கொடுப்பானென்றாரிறஸூல்.

(211) றமளான் தனிலொரு நோன்புவிட்டால்
நோவன்றி மற்ற உதுறன்றியே
ஜமனாங்கல காலம்பிடித்தாலந்த
ஸவ்முக்கெதிராகாதென நவின்றார்.

(212) கணவன் விடையன்றி நப்ல் நோன்புகள்
கணவி பிடிக்கவும் ஆகாதென்று
மணமாம் முஹம்மது வுரைத்தாரென
வள்ளல் இமாம்புகா ரியுரைத்தார்.

(213) நன்மையுள நோன்பு நரகம்விட்டு
நல்ல அரணென்று உரைத்தாரென
தின்மை யணுகாத உத்மானென்போர்
செப்பினரென ஷெய்குரைத்தார்.

(214) வரிசையுள குர்ஆனும் நோன்பும்
வல்லானிடத்தில் மன்றாடுமென
பிரிசமுள நபியுரைத்தா ரென்று
பேசினர் எங்கள் இப்னுஹஜர்.

(215) ஆதிதனைநாடி றமளான் தன்னில்
அஞ்சி அழகாக நோன்பு வைத்தால்
நீதமணுகாத முன் பிழைகள்
நீதன் பொறுப்பானென்றிறஸூல் சொன்னர்.

(216) றமளான்தனில் நோன்பு வைத்துப் பின்பு
நெறியாய வணக்கை வயிறபத்தை
சமதமுடன் பேணினோர்க்கு சொற்கம்
சங்கைப்பிணை நானென்றாரிறஸூல்.

(217) கஸ்தூரி வாடைதனில் மணமாம்
கனதியுள நோன்புபிடித் தோர்கள்வாய்
விஸ்தீர்ண முள்ளான் பக்கலென
விளம்பின ரெங்கள் நபியிறஸூல்.

(218) நன்மை மிகவுள்ள நோன்புதன்னை
நலமாய்ப் பிடித்தோரைத் துறப்பித்தோர்கள்
தின்மை யடங்கலுந் தீருமென்றும்
தீ விட்டுரிமையும் கிடைக்குமென்றார்.

(219) அற்ஷின் நிழலின்கீழ் இருத்திவைத்து
அழகாம் ஒடுக்குகள் இவர்களுக்கு
குர்ஸியுடையவன் கொடுப்பானென்ன
குறைந்த துன்யாவை நெகிழ்ந்தோர் சொன்னர்.

(220) ஆதிவிதித்ததோர் நோன்பு தன்னை
அழகாய்ப் பிடித்தவர் இறைபக்கலில்
நீதியுகப்புள்ளோ ராவாரென்ன
நிகழ்த்தினர் எங்கள் நபியிறஸூல்.

(221) வரிசைமிகவுள்ள நோன்புவைத்து
வாகாய் துயில்செய்தோர் நித்திரையை
பிரிசமணுகிய இபாதத்தென
பேசினு ரெங்கள் நபியிறஸூல்.

(222) வண்மையுள நோன்பு பிடித்தவர்க்கு
வாகாய்ப்புனல் கொடுத்தோர்கள் என்தன்
உண்மை ஹவ்லுநீர் குடிப்பாரென்ன
உயர்ந்த நபியிறஸூல் உரைத்தார்.

(223) மக்கம் தனக்குப் போய்வர வுடமை
வாகாயுடையோர்கள் மக்கம் தன்னில்
ஹக்காக ஹஜ்ஜு செய்யாத பேர்
காபிர் யஹூதிகள் நஸ்றுனியாய்.

(224) சக்குப் பிசகின்றிச் சாவாரென்று
தம்பிரான் நபிமொழிந்தா ரென்ன
தர்க்கம் பறையாத நால்யார்களும்
சங்கை அஸ்ஹாபிமாரும் சொன்னுர்.

(225) கடலின்றி வேறு வழியில்லையேல்
ஹஜ்ஜுக்குப் போக விதியலவென்
றடவாகச் சொன்னுர் இமாம்ஷாபியீ
அழகான உம்முவெனும் கிதாபில்.

(226) மிகுதி பிழைப்பெல்லாம் கடல்தனிலே
மேவியிருக்கின்றேன் மேலில் ஹஜ்ஜு
தகுதியுள வாஜிபாகு மென்று
சாற்றினுர் இம்லாதனில் ஷாபியீ.

(227) மக்கம்தனிற் சென்று ஹஜ்ஜு செய்யா
வண்மை யணுகாத காபிர்கள்மேல்
ஹக்காய்த் திறைபோடுவே னெனவே
கருணை உமறுகத்தா புரைத்தார்.

(228) சிறப் பானஹஜ்ஜு செய்யாதொரு
சீமான் இறந்தானென்னயல் பாகத்தில்
வெறுப்பாய்த் தொழுவித்தேனில்லை யென்றார்
மேலான ஸஃதுப்னு ஜுபைற்

(229) நன்மையுடன் கூடி ஹஜ்ஜு செய்தால்
நாயன் அவன் குற்றம் அடங்கலேயும்
தின்மையணுகாத பாலகன் போல்
தீர்ப்பானெனச் சொன்னார் பயகாம்பரே.

(230) கபூலாம் ஹஜ்ஜுக்குக் கூலியில்லே
கனகபதி சொற்க மொழியவென்றும்
மவ்லாநபி சொன்னாரென வுரைத்தார்
வள்ளல் அபூஹுறைரு என்பவர்.

(231) நடந்து போய்ஹஜ்ஜு செய்தபேர்க்கு
நாளேகியாமத்தில் ஆதி நாயன்
கடந்த அடிக்கேழு நூறு லட்சம்
ஹஸனுத் தளிப்பானென்றாரிறஸூல்.

(232) சீவனுளவஸ்தை குறைப்படுத்தி
செத்தால் தவ்பா இல்லாமல் நாளே
தாவுநரகத்தில் பெரிய நாயன்
தண்மைகுறை செய்வானென நவின்றார்.

(233) மிருகசாதி யின்வதனம் தன்னில்
முனிவாய் அடித்தோர்கள் சூடுவைத்தோர்
அற்ஷுகுற்ஸையும் படைத்தநாயன்
அமளிலஃனத்தில் ஆவாரென்றார்.

(234) நாட்டான் மகனே விற்போருடனும்
நலமாகவேலே செய்தபேர்க்கு
வேட்டனுடன்கூலி கொடானுடனும்
மேலான் வழக்காளியாவா னென்றார்.

(235) வட்டியருந்தினோர் தங்களே யான்
வானந்தனிலேறும் நாள்தனிலே
திட்டியால் கண்டேனவர்கள் வயிற்
செருமிக்கிடக்கும் பாம்புந் தேளுமாய்.

(236) வெட்டிதனிற் கிடப்பார் வீக்கமாய்
வீணன்பிர் அவ்னு கூட்டங்கள்தான்
முட்டிச் செருமிவந்தேறிப் போறார்
மொழிந்தேன் ஜிப்ரீலே இவராரென.

(237) கெட்டபொலிசை யுள்ளோர் களென்று
கிருபைஜப்றயீல் சொன்னா ரென்ன
அட்டதிசை எல்லாம் துலங்க வந்த
அஹ்மதி றஸூலுல்லாஹ் உரைத்தார்.

(238) பலிசை தின்றோர்கள் கியாமத்துநாள்
பைத்தியக்காரர் போலாகவே
உலகர் அடங்கலும் கண்டிடவே
உள் றித் தடுமாறிவீழ்வா ரென்றார்.

(239) இரத்தம் ஒலித்தோடும் நதிதனிலே
நீந்தி வருகிறான் கரையைநாடி
வெற்றிபெற வரும் போதொருவர்
விரட்டி யெறிகிறார் ஒரு ஆதமி.

(240) இந்தப்படியவன் ஹாலைக்கண்டு
இவனாரெனக் கேட்டேன் ஜிப்ரீலுடன்
அந்தமுள ஜிப்ரீலுரைத்தார்
ஆகாப்பொலிசை தின்றோர்களென்றே.

(241) பலிசைதனைத் தின்னுவோர்களையும்
பாங்காய் அருந்துவோர் தங்களையும்
பெலமான சாட்சியிருவரையும்
பெருமான் முஹம்மதுநபி முனிந்தார்.

(242) வட்டிபொலிசையில் எழுபத்து
வலிப பெரும்பாவ முண்டுமதில்
குட்டிச் சிறுபாவமாகிறது
கூடுவது தாயோடாகுமென்றார்.

(243) வட்டிதனில் ஒருதிர்ஹம் வாங்கல்
வலியஜினா முப்பதொடு மூன்றிலும்
கெட்டபிழை யென்றார் ஆதிபக்கல்
கிருபை மிகவுள்ள நபியிறஸூல்.

(244) அவ்வாசிதனில் விராகன் தன்னில்
ஆகாப்பொலிசை ஆமென்றோர்கள்தான்
செவ்வே நடக்காத காபிரென்ன
திசையாம் உலமாக்கள் செப்பலுற்றார்

(245) பஸிசை யருந்தினோர் பன்றிபோலும்
பஸீஹறத்தணுகிய நாய் போலவும்
அலையாப் பெருநாயன் கியாமத்துநாள்
அவனை யெழுப்புவானென ஓதினர்.

(246) ஹலாலாம் ஒசீவனம்தனைத் தேடுதல்
கடிந்த விதியென்று முஸ்லிம்கள்மேல்
குலாவும் பெருமையில்லாத நபி
கூறினாரென்றார் இமாம்பைஹகீ.

(247) ஹலாலான அன்னம் தனையருந்தி
கருணைநபி சுன்னத்தில் நடந்து
பலாயாம் அநியாயம்தனைத் தவிர்ந்தால்
வரிசைப்பதி சொற்கம் புகுவாரென்றார்.

(248) பத்துதிர்ஹத்தால் ஒரு பிடவை
பாங்காய் ஒருதன் கொண்டானதிலே
வெற்றி ஹறாமான ஒருதிர்ஹம்
விழுந்தா லவன்மேலே கிடக்குமட்டும்.

(249) சத்தியுள நாயன் அவன் தவத்தை
சமுகந்தனில் கூட்டானென விறஸூல்
பத்திபெறச் சொன்னாரென வுரைத்தார்
பயகாம்பர் தோழர் இப்னுஉமற்.

(250) ஹறாமா முடமைகள் தின்றெழுந்த
கள்ளத்தசையான் மாங்கிஷங்கள்
திறமாய் சொற்கத்திற் செல்லாதென
செப்பினா ரென்றார் இப்னுஹிப்பான்.

(251) ஹஜ்ஜு மிகச் செய்தாலும் நோன்புகள்
கருதிப் பிடித்தாலும் ஜகாத்திட்டாலும்
கச்சஹறாம் தின்றோர் அமலழிந்து
கடுக நரகத்தில் வீழ்வாரென்றார்.

(252) தவசம் தனைக்கட்டிக் குறைந்தபோது
சங்கை முஸ்லிம்கள் தங்களுக்கு
தவனமாய் விலையேற விற்போர்
தண்மையுள பாவியாகு மென்றார்.

(253) ஹறுமாமுடைமையால் ஹஜ்ஜு செய்தால்
கத்தா கபூலாக்கா னென்றுநபி
திறமாகச் சொன்னரென ஹதீதில்
சிறப்பாம் உலமாக்கள் செப்பினரே.

(254) வரிசை உமறுரைத்தார் நபியை
வண்மையுடன் சொல்லகேட்டேனென்ன
பிரிசத்தவசத்தைக் கட்டிவைத்து
பின்னே குறைந்தக் கால் விற்போமென

(255) கருதிமனம் வைத்து இருப்பவர்க்கு
கருங்குட்டமெனும் குறைநோதலும்
பிரியாஅலேச்சலும் மிடிமையுமாய்
பெரியோன் கொடுப்பானென்று ரிறஸுலில்

(256) ரிஜ்காம் தவசத்தைக் கட்டிவைத்து
ரீதியணுகாமல் குறைய விற்போர்.
பிசகில்லா நாயன் முனிவுபெற்று
பிரியாமிடையவர்க் குண்டாமென்றார்.

(257) வள்ளல் உமறப்பயலிந்தத்தொழில்
வண்மையணுகாமற் செய்தளவில்
மெள்ளச் சிலகாலம் சென்றபோது
மேனிதனிற்குறை நோதலானர்.

(258) உயர்ந்த விலைவிற்போமெனக் கருதி
ஊரில் தவசத்தைக் கட்டிவைத்து
பயந்த கொடும்பஞ்சம் தனில்விற்பது
பாரப் பெரும்பாவம் ஹறுமுமாமே.

(259) தாய்வேற் பிள்ளை வேருய்ப் பிரித்த
சங்கையணுகாதார் அவர் பிள்ளையை
வாய் முத்திரையாகும் நாளையிலே
வல்லான் பிரிப்பானென்றுரி றஸுலில்.

(260) வண்மையுள முஸ்லிம்கள் மேலே
வாளாயுதம் கொண்டு ஓங்கினேரும்
மண்மேல்சதி செய்தபேர்களுமென்
மனிதர்தனிலல்ல வென்றார்நபி.

(261) வடுவாம் ஐபான வஸ்துக்களை
மறைத்து முஸ்லிம்கள் தனக்குவிற்போர்
உடையோன் லஃனத்திலாவாரென்ன
உண்மை நபிசொன்னார் ஒழியாமலே.

(262) தனக்கு உகப்பான கருமங்களை
சங்கை முஸ்லிம்கள் தங்களுக்கும்
கனக்கவுகப்பில்லார் ஈமானெறி
கைகூட்டானென்றார் காவல்நபி.

(263) பொய்யான ஆணை தன்னையிட்டு
போக செலவழிப்போர் சரக்கை
மெய்யாய் இவர்களை நாயன் நாளை
மிகுந்த முனிவாகப் பார்ப்பானென்றார்.

(264) உண்மையுடன் கச்சவடங்கள் செய்வோர்
ஓடும் கியாமத்து நாள்தனிலே
தண்மை யணுகாதான் அற்ஷின்கீழே
சங்கையுட னிருப்பார்க ளென்றார்.

(265) நிறையால் அளவினால் முற்காலத்தோர்
நீதமணுகாமல் ஹலாக்காயினார்
குறையாதளவுங்கோ நிறுங்கோளென்ன
கோமான் முஹம்மது நபியுரைத்தார்.

(266) அளவு நிறைதனில் கபடு செய்வோர்
ஆனகியாமத்து நாள் தனிலே
பழிசேர் நரகத்தில் தாழ்வாரென்ன
பகர்ந்தார் இப்ன்ஹஜர்தப்ஸீரிலே.

(267) தரகர் சேருவார் நரகமென்ன
சங்யுள முன்னோர் சொன்னாரென்று
குருவாம் அஹ்மது இப்னுஹஜர்
கூறினார் ஜவாஜிர் தன்னிலே.

(268) பேணித்தராசு மீஜானிருத
பேர்கள் மவ்த்தாகும்போது நாக்கில்
ஆணி அறைந்தாற்போல் தராசினுக்கு
அழகாம் கலிமாவைத் தவிர்த்திடுமே

(269) கடனும் †தைன் வாங்கி உழப்பிச்செத்தோர்
கருணையுள நன்மை தனையெடுத்து
திடனாய்க் கடன் கொடுத்தோனுக்கிறை
தீரும் கியாமத்தில் கொடுப்பானென்றார்.

(270) பெண்ணைப் பிறந்தோர்க்கு மஹர் கொடாமல்
பிரிந்து மவ்த்தானோர் வருவார் நாளை
கண்ணால் தெரிசிக்கப்படானிடத்தில்
ஹறாமாம்ஜினாச் செய்தோனாக வென்றார்.

(271) தைனும் கடன் தன்னை உழ்ப்புறதும்
தம்பிரான் தனக்கிணை வைப்பதும்
*மைனும் பிசகின்றிச் சரியாமென
வள்ளல் முஹம்மது நபியுரைத்தார்.

(272) கடனுக்குடமை வையா திறந்தோர்
கடிந்த பெரும்பாவியாக நாளை
உடையானிடத்திலே வருவானென்ன
உண்மை நபியிறஸூல் மொழிந்தார்.

(273) மூன்றுமுறை பீஸபீலில் சென்று
முயன்று பட்டாலும் கடனுண்டாகில்
ஆண்டான் சுவர்க்கத்திலாகாரென்ன
ஆணையுரையாக நபியோதினார்.

(274) உண்டாயிருக்கையில் உழப்புறது
உரத்த அநியாயமாகுமென்ன
வென்றியுள நபியுரைத்தாரென்ன்
விளம்பினார் புகாரீ முஸ்லிம்.

(275) தகப்பர் மவ்த்தான சிறியோர்கள் தன்
தகுமாம் உடமையை அருந்துவது
பகைப்பாம் பெரும்பாவம்தனி லொன்றென
பகர்ந்தாரெனப் பேசினார் புகாரீ.

(276) எத்தீம் உடமையை யெற்றித்தின்போர்
ஏகும் கியாமத்து நாள்தனிலே
வெற்றியுள சொற்கம்புகுதா ரென்ன
விண்ணேறிவந்த நபி யோதினார்.

---

† தைன் = கடன். * மைன் = பொய்.

(277) தந்தை மவ்தான பிள்ளைகள் தன்
தகுமாம் உடமையை தின்கிறது
அந்தமுள ஆதி பக்கலிலே
அமளி பெரும்பாவமாகு மென்றார்.

(278) பேசும் வாசலால் பின் வாசலால்
பெருத்த நெருப்பாக எரிந்திடவே
நாஸாம் மனிதரில்சில மனிதர்
நாளை கியாமத்தில்வருவா ரென்றார்.

(279) அவர்கள் தனைசெப்பு மென்றளவில்
அந்தமுள தந்தையிறந்த பிள்ளை
இவர்கள் உடமையை ஹக்கென் றியே
இனிதாகத் தின்றோரென நவின்றார்.

(280) தட்டாம் மிஃறாஜுக் கேகும்போது
சங்கை யணுகாதபேர்களை யான்
ஒட்டை மறுகைபோல் கண்டேனவன்
உரைக்கும் வாயிலும் பின் வாயிலும்

(281) கட்டி நெருப்பாக எரிந்திடவே
கனதிஜிப்ர யீல் தம்முடனே
தட்டியிவனு ரென்றுரைத்த போது
சங்கை எதீம்மாலேதின்றோ னென்றார்.

(282) பிதாவாம் தகப்பனை இழந்திருக்கும்
பிள்ளைதனை வளர்ப்போனும் யானும்
இதமாம் சுவர்க்கத்திலிது போலென
இனியநபி இருவிரல் காட்டினார்.

(283) எளிமைத்தன முள்ள எதீமுகளை
ஏற்றமுடன் கூட்டி அசனஞ்செய்தால்
குளிர்மை சுவர்க்கத்தில் குதாய்தஆலா
குடியா யிருத்துவானென ஓதினார்.

(284) தீங்கில்லா முஸ்லிம்கள் வீட்டில்
சிறப்பான இல்லம் எதீமுகள்தான்
பாங்காய் வளருமவ் வீடெனவே
பாங்குருடன் சொன்னார் பயமாம்பரே.

(285) சங்கை யணுகாத வீடாவாது
தகப்பன் இறந்த பிள்ளையிருந்தும்
பங்கமிகப் படும் வீடெனவே
பகர்ந்தார் நபியென்றூர் இப்னுமாஜஹ்

(286) எத்தீம் தனைப்பேணியே வளர்த்து
இறந்த மடந்தையை யெனக்குமுதல்
வெற்றிப் பதியிற்கண்டே னெனவே
விரலாற் புனலோட்டிவித்தோர் சொன்னூர்.

(287) எளிய எத்தீம்களுக்கிரக்கமுமாய்
இனிய அயலின்மேல் பெருமைத்தனம்
அழியும் துணியாவில் காட்டார்களை
அதாபு படுத்தானென்றூணை யிட்டார்.

(288) தந்தை யிறந்தோர்கள் தன் தலையை
தம்பிரானுக் காய்த்தட வினோர்க்கு
அந்தமுள நாயன் ஓர் முடிக்கோர்
அழகான நன்மை கொடுப்பானென்றூர்.

(289) புருஷன் இறந்த பெண்சாதிகட்குப்
பேணியுதவி யொத்தாசை செய்தோர்
பெருமை சிறப்பில்லாகாபிர்கள்மேல்
பீஸபீல் வெட்டும் போலெனவும்.

(290) இரவுதனில் முழித்தமல்கள் செய்தும்
இலங்கும் பகலையில் நோன்புமாக
பிரியாதிருக்கின்ற பேர்தஜா
பெறுவாரெனச் சொன்னூர் பிறையழைத்தோர்.

(291) ஆதி தனக்குமாகிறந் தனக்கும்
அழகான ஈமான் கொண்டாலவன்
நீதமுடன் நன்றி அயல் தனக்கு
நெறியாகச் செய்வானென ஓதினூர்.

(292) அயலான் மடந்தை யோடணுகிப்பொல்லா
ஆகாச் செயல்ஹறும் செய்கிறதும்
மயலா மறுபது பெண்ணுடனே
வடுவாம் ஜினுவிலும் வலிதாமென்றூர்.

---

எதீம் = அனூதை.

(293) மூன்றுமுறை நபி சத்தியமாய்
மொழிந்தார் அயலை அச்சம்மாக்கினோர்
ஆண்டபெரியவன் தனக்கு ஈமான்
அஞ்சி அகத்தினுற் கொள்ளானென்றே.

(294) நாற்பது வீடு அயலெனவே
நல்ல அபூபக்கற் உமறு அலி
கூர்ப்பாயுரைந்தார்களென நவின்றார்
கோஜா இமாம் தபறானியென்போர்.

(295) அச்சப்படுத்தினோர் அயலார்தன்னை
அழகாம் சொற்கத்திலாகாரென
கச்சக்குணமில்லா நபி ஆணையால்
கன்னல் மொழியாக கவலலுற்றார்.

(296) ஜாரும் அயலை நோவித்தோரென்னை
தருமாக நோவித்தோர்களென்னை
வீறாக நோவித்தோர் ஆதியை
வெளியாக நோவித்தோர் போலென்றார்.

(297) பீஸபீலுக் கென்றெழுந்தபோது
பெருமான் முஹம்மதுநபி பகர்ந்தார்
வாசமாம் அயல்தனை வெறுத்தோர்
வரவேண்டாமென்ற போதொருவர்.

(298) பேசினாய்ப் அயல்மதிழின்
பிடித்துருபுமண்நோன் குறைய
நேசமணுகாமல் எடுத்தேனென்று
நிகழ்த்தினாரப்ப நபியிறஸூல்.

(299) அயலாயிருப்போர்கள் கியாமத்துநாள்
அவ்வலீவழக்காளியா வாரென்ன
பயலாம் அடியாரை அடியாநபி
பகர்ந்தாரெனச்சொன்னார் தப்றானியே.

(300) ஜிப்ரீல்பலகாலம் என்னுடனே
செப்புவார் வந்துநம் அயலை
தவனமாய்ப் பேணுமெனவேயென்று
சங்கைமுஹம்மது நபியோதினார்.

(301) ஏழுமுழத்திற் கப்பாலுயர்த்தி
இல்லம் தனையெடுத் தோனுடனே
நாளைகியாமத்தில் சொல்லப்படும்
நன்மையணுகாத பாஸிகென்றே.

(302) உயர்ந்ததொருகுப்பா தன்னைக்கண்டு
உண்மைநபி மிக பொருத்தக்கேடாய்
அயர்ந்தங்கெடுத்தவன் வந்தபோது
அவன்தன்ஸலாமை கையேற்றாரில்லை.

(303) வீணும் அகமெல்லாம் கியாமத்துநாள்
விதனமாய்வந்து வீழுமென்ன
காணுக்குறைந்ததால் பெருங்கூட்டத்தின்
கடிந்த விடை தீர்த்த நபியோதினார்.

(304) களிமண் தனைக்கொண்டும் செங்கல்கொண்டும்
கல்வீடு கட்டினோ ராதிபால்
இளிம்பா மனிதரென் றுரைத்தாரென்ன
இனியதப்ருனி இமாம் உரைத்தார்.

(305) நின்றால் தலைகள் தட்டாமலென்றும்
நீட்டினால் கால் தட்டாமலென்றும்
வென்றியுள மூஸாநபி பந்தல்போல்
வீடான இல்லம் எடுங்கோளென்றார்.

(306) ஆகாமனிதர்கள் உடமை தன்னை
அழிப்பார்கள் வீணாய் எடுப்பிலென்ன
வாகாய் புறுக்கேறி வானிற்சென்ற
வள்ளல் முஹம்மது நபியோதினார்.

(307) தனக்கு போதுமட் டதனைவிட்டு
சங்கையில்லா வீடெடுப்போர்களை
கனக்கஇதைச் சுமவென்று நாளை
கவலப்படு மென்றார் முனிவாகவே.

(308) இல்லந்தனில் செலவழிப் போர்கள்தான்
இந்த அதாபிலே ஆயிருந்தால்
கல்லையணுகிய கலியாணத்தில்
கடன்கொண் டழிப்போர்கள் அதாபுசொல்வாய்.

(309) சிறிய தகப்பனுர் அப்பாஸென்போர்
சிறப்பாய் ஒருகுப்பா வெடுத்தபோது
அருமை நபியுல்லார் அதனைக்கண்டு
அப்பாஸேயிதை இடியுமென்றுர்.

(310) அழியுமுடமைகள் வீண்எடுப்பில்
ஆகாவுடமை யென்றுரெனவே
தெளியும் உரைபேசும் அபூதாவூது
திறமாகச் செப்பினுர் கிதாபில்.

(311) வரிசை நபி நூஹோர்க்குச் செடுத்து
வாகாயிருக்கையில் மனிதர் வந்து
பெரிய் வீடெடுப்போ மெனவே
பேசினுரப்போ நபி செப்புவார்.

(312) பிரியாதிருப்போமோ துன்யா தன்னில்
பிரியுமனிதர்க்குப் போதுமென்று
உரியமனிதற்கு நூஹு நபி
உரைத்தாரெனச் சொன்னுர் உலமாக்களே.

(313) நாலுமுழ நீளமுள மகலம்
நாறிக்குழிதனிற் கிடக்கின்றவன்
மேலாம் பரமாக வீடெடுக்க
விதியோகுழி வீட்டை யழகாக்குவாய்.

(314) வீடுதனை அலங்காரமாக்கி
வீழும் கப்றறைதனை பாழாக்க
நாடுமோவிது புத்தியுள்ளான்
நன்மையாய் கப்றதனை வாழ்விப்பாய்.

(315) கூட்டாளியான விசுவாசியை
குறிகேடணுகியே சதிசெய்வோரை
கூட்டேனெனச் சொன்னுர் என் உம்மத்தில்
கொண்டல் குடையாக வந்த நபி.

(316) நம்புமு் மனிதரைச் சதிசெய்வோர்மேல்
நாளைநான் வழக்காளி யென்ன
அன்பியாக்கெல்லாம் அரசாய் வந்த
அழகாம் முஹம்மது நபி யோதினுர்.

(317) சாகும்போது தன் குடும்பத்திற்கு
தகுமாய் வஸிய்யத்துச் செய்யாதபேர்
ஏகும் கியாமத்து நாளவர்க்கு
எரியும்தழல் விதியாகு மென்றார்.

(318) வருஷ மறுபதில் செய்தஅமல்
வாகாய் வஸிய்யத்துச் செய்யாவிட்டால்
பிரியும் அமல்நாளை எரிநெருப்பு
பிந்தாதே முந்தக் கிட்டுமென்றார்.

(319) எழுபது ஆண்டாய் துர்ச்செயல்கள்
இம்மைதனிற் செய்தாற் சாம்பொழுது
தெளிவாய் நெறியாக வஸிய்யத்திட்டால்
ஜன்னத் தெனும்பதி சேர்வானென்றார்.

(320) தந்தம் வங்கிசம் தன்னைவிட்டு
தகுமல்லா வங்கிசம் சேருவோர்
அந்தமுள ஆதி நாயனுக்கு
ஆகாக்குபிர் செய்தோ ராகுமென்றார்.

(321) மூவர்தனை நாயன் முனிவானென
மொழிந்தார் நபியுல்லா(ஹ்) அதனைக்கேளீர்
ஆவலுள அன்னை தந்தைவிட்டு
அகன்று வெறுத்தோனும் தன்பிள்ளையை

(322) கோவித்து பேஜா ருக்கினோனும்
குணமாயுரிமை விட்டானை விட்டு
சேவித் தொருவனைச் சேர்ந்தவனும்
தீதர் இவர் மூவ்வராகுமென்றார்.

(323) ஒட்டை நிலந்தன்னை அநியாயமாய்
உகந்திங் கெடுத்தோர்க்கு எழுபூமியும்
தட்டாய் அரிகண்டமாய்க் கழுத்தில்
சாத்தப்படு மென்றார் நபி யிறஸூல்.

(324) அநியாயமாக ஒருச்சாணிலம்
அவனிதனி லெடுத்தோனை நாளை
முனிவாய்ச் சுரிவாங்கப் படுமெனவே
முன்பின் தெரிகின்ற நபியோதினர்.

(325) நிலத்தை யெடுத்தோரை ஹக்கன்றியே
நெறியாயதைச் சுமப்பாயெனவே
பெலத்தால் வலியவன் சொல்வானென்று
பீருதபறானிபேசி வந்தார்.

(326) மிகுதி அநியாயம் ஏதெனவே
மேலாம்நபி தமைகேட்டளவில்
தகுதிதனைக்கொண்டு ஒருமுழத்தின்
தரையை யெடுப்பதென்றாரிறஸூல்

(327) முஸ்லிம்வழிதனில் ஒருசாண் நிலம்
முனிவாய் எடுத்தோர்கள் அதனை நாளை
நசியச்சுமப்பார்களென்றா ரென்ன
நலமாம் தபறானி நவின்றோதினார்.

(328) வல்ல ஒரு முஸ்லிம் அஸாவை
வம்பாயொருவன் வந்தெடுக்க ஹக்கு
அல்லவெனச் சொன்னார் நபியெனவே
ஆலிம் இப்னு ஹிப்பானுரைத்தார்.

(329) வார்த்தை விசுவாசமில்லாதார்க்கு
வன்மையுள ஈமானில்லை யென
ஈத்தமரத்தூரை ஹயாத்தாக்கிய
ஏற்றமுஹம்மது நபியோதினார்.

(230) ஊசிதனைக் கொண்டு உச்சி தன்னில்
உரமாய்ப் பதிப்பதிலேசாமொரு
வாசமறுஹறாம் வல்லியுடன்
வழியில் நடப்பது ஆகுமென்றார்.

(331) பெண்ணாய்ப்பிறந்தவளுடன் தனிக்க
பேணிப் பயந்துகொண்டிருங்கோ ளென்ன
கண்ணாவிறைவனைக் கண்ட நபி
கனமாம் குழாந்தனில் கவலலுற்றார்.

(332) என்னை படைத்ததோர் நாயனாணை
எவரும் எவளுமாய்த் தனித்தீராகில்
ஜின்னின் இப்லீஸூ இடையில் வந்து
திரிவானெனச் சொன்னார் நபியிறஸூல்

(333) விலக்காம் ஹறும் நோக்கல் இப்லீஸுடை
விருப்பமுள்ள நச்சுவாளி யென்ன
பலக்கேழ்தனைக் கடந்தற்ஷில் சென்ற
பயகாம்பர் ஆலநபி யோதினார்.

(334) எல்லாவிழிகளும் கியாமத்து நாள்
ஏங்கியழுமதில் மூவ்வர் விழி
தொல்லை தனக்கஞ்சி யழாதெனவே
சொன்னார் ஹறும்பார்வை பாரார் கண்ணும்.

(335) புல்லர்தனைக்கொல்லும் பீஸபீலில்
பேணி முழிப்பாக இருக்கும் கண்ணும்
வல்லான் தனையஞ்சி அழுதகண்ணும்
வாகாயிது மூன்றும் கரையாதென்றார்.

(336) ஆதிதனக்கும் ஆகிறம் தனக்கும்
அழகாய் யகீன் கொண்டோர் பெண்ணுடனே
நீதிமஹ்றமென்றீ தரிக்க
நெறியல்ல ஹறுமாகுமென்றார்.

(337) பஷிசைதனில் கெட்டபெரும் பஷிசை
பதியிலுள முஸ்லிம்கள் தம்மை
பேலமாயுதாசீனம் சொல்வதென
பேரால் பெரியவர் நபியோதினார்.

(338) செம்புநகத்தினால் சில மனிதர்
செப்பமுள நெஞ்சை வதனம்தன்னை
சிம்பிப் பிடுங்கக்கண் டுரைத்தேன்கூறும்
ஜிப்ரீலேயிவரா ரெனவே.

(339) ஆனஜப்றயீல் உரைத்தாரப்போ
தவனி தனிலுள முஸ்லிம்களை
சீராய்ப் பறையாமல் உதாசீனங்கள்
செப்பினரென்று ஜிப்ரீல் சொன்னார்.

(340) நரகந்தனிற் கண்டேன் சில பேர்களை
நாற்றமுள விடக்கானவையை
கருதி யருந்துறரிவரா ரென
கருணைஜப்றயீ லோடுரைத்தேன்.

(341) பெரியோன் அருட்படி ஜிப்ரீல் சொன்னார்
பெண் ஆண் இவர்களில் மனிதர் தசை
பரிவாகத் தின்றுபுறம் பேசின
பாவி மனிதர்கள் இவராமென்றார்.

(342) ஜைனபுநம் பிராட்டியார் தான்
சிறப்பாம் ஸபிய்யாவை யஹூதியென்று
ஜபாயுரைத்த போதவரை நபி
அநேக நாளாக வெறுத்திருந்தார்.

(343) ஜாபிறெனும் அஸ்ஹாபி சொல்வார்
சங்கை நபியுடன் இருந்தோம் நாங்கள்
தாவி யொரு நாற்றமுண்டாச்சுது
சாற்றுவார் நபியிந்த நாற்றம்.

(344) பாவி மனிதரில் புறம்பேசின
பளீஹத்தணுகிய நாற்றமென
சாவில்லா நாயன் தன் வஹ்யால்
சங்கையுள யார்களோ டுரைத்தார்.

(345) ஆகாஜினுவிலும் புறம்பேசுதல்
அதிக தோஷமென் றுரைத்தாரென
வாகாயுரை பேசும் நல்ல எங்கள்
வரிசை தபறானி வகுத்தனரே.

(346) புறம்பேசி யர்னோர் கப்றறையில்
பெருத்த நெருப்பாக எரிந்திடவும்
தறையாம் குழிதனில்கடிந்த அடி
சத்தம்படவும் யான்கண்டே னென்றார்.

(347) ஒருதன் இடத்திலே ஒருதன் தன்னை
உறுதிப்பட புறம் பேசப்பட்டால்
கருதியவனுக்கு வுதவி செய்தால்
கத்தா முனிவுதா னிவனுக்குண்டாம்.

(348) கோளன் சுவர்க்கத்தில் புகுதானென்ன
கோஜா நபியுல்லா(ஹ்) உரைத்தாரென்று
தோழர் முஸ்லிமும் அபூதர்ரியும்
துய்யகி தாபினில் வுரைத்தனரே.

(349) ஈன மிகவுள்ள கோள் கொடுமை
எரியும் நரகத்தில் ஆக்குமென்ன
தானமுடன் ஒரு முஸ்லிம் கல்பில்
சந்தியாதென்றும் நபி பகர்ந்தார்.

(350) கோளாம் குண்டுணிதன்னில் மிக
குறிகேடனுகியே நடப்போர்கள்தான்
வாழு மனிதரில் பொல்லாரென்ன
வள்ளல் முஹம்மது நபி யோதினர்.

(351) சாடி தனைக்கொண்டு நடப்போர்களை
தம்பிரான் நாளை நாய் வேசத்தில்
கேடாய் எழுப்புவானென்றுரென
கிருபையுள ஷெய்கு வுரைக்கலுற்றூர்.

(352) உங்கள்தனில் கெட்டபேர்கள் தன்னை
உறுதியுடன் சொல்வேனே வெனவே
சங்கைநபி கேட்டபோது யார்கள்
சாற்றுமென கேட்டாரப்பொழுது.

(353) திங்கள் முஹம்மதுநபி செப்பினர்
தீங்காய் மனிதர்கள் கோளைக்கொண்டு
பங்கமுட னடப்போர்களென
பாங்கரொடு சொன்னர் பயகாம்பரே.

(354) மூஸாநபி மழை கேட்டபோது
முதல்வன் மழையில்லை யென்றுனப்ப
கோஜாநபி கேட்டா ரேதுக்கென
கோளனிருக்கிருனென நவின்றூர்.

(355) பேசுமவ னுரென்று ரப்போது
பெரியோனுரைத்தான் யான் சொன்னேனுகில்
தோசமணுகிய கோளனென
சொல்லப்படுமென்னை யென நவின்றுன்.

(356) கோளன் இதைக்கேட்டு சலித்துதவ்பா
கூறியிறைபக்கல் மிகக்கெஞ்சினன்
ஆளும் பெரியவன் அப்பொழுது
அமளி மழையாக இறக்கினனே.

(357) இரண்டு முக முள்ளான் துன்யா தன்னில்
நாளை கியாமத்தில் நெருப்பினாலே
யுண்டாமிருமுகம் தன்னைக் கொண்டு
உலகர்க்கெலாம் பார்க்க வருவானென்றார்.

(358) இருநாக்குடையவன் தனக்கிறைவன்
யவ்முல் கியாமத்து நாளதிலே
எரியால் இருநாக்கை யளிப்பானென்ன
எங்கள் முஹம்மது நபியோதினார்.

(359) தஹ்லீல்தனைக்கொண்டு நிற்போர்களை
தம்பிரான் முனிவானெனவே
அஹ்மதிறஸூல் சொன்னாரெனவே
அழகாம் இப்னுமஸ்வூ துரைத்தார்.

(360) தாலகுசெய்ய ஹறாமெனவே
சங்கையுமற் சொன்னார் அதின்பிறகு
மாலிகஹ்மது ஹஸன்பஸரி
வள்ளல் இப்றாஹீமும் ஸஃதும்.

(361) காலிகெனும் நாயன் தனைப்பயந்த
கருணை தவ்ரியும் மற்றுள்ளாரும்
ஹாலிகெனுமிந்த இருவரையும்
ஹத்தால் கொலைசெய்யத் தகுமாமென்றார்.

(362) புணர்ச்சிதனை வெளிப்படப்பேசிய
பூவைமார்களும் புருஷர்மாரும்
கணஞ்சேர் கியாமத்தில் ஆதிபக்கல்
கடிந்த முனிவான சத்துரென்று.

(363) குணஞ்சேர் நபியுல்லா(ஹ்) சொன்னாரென
குத்ரியெனும் ஷெய்கு மற்றுமுள்ள
மணஞ்சேர் முஸ்லிமும் வரிசையுள்ள
வண்மை இமாம்களும் உரைத்தார்களே.

(364) பூவைமார்கள்தான் புருஷமார்தான்
புணர்ச்சியெனும் ஸிர்றை வெளியாக்கினால்
பாவமிகவுள்ள ஷெய்த்தானென்றே
பாரக்களரியில் பகர்ந்தார் நபி.

(365) ஆனோடணைந்த வனவனளவில்
அவன் பின்னடுத்த வனவனளவில்
காணாப் பெரியவன் முனிவாகவே
கருணை யெனும் கண்ணால் பாரானென்றார்.

(366) பூவையர் பின்னில் அணைந்தபேர்கள்
புர்கானிறக்கின நாயனுக்கு
பாவமிகச் செய்த காபிரென்ன
பார்தப் றுனிபகாலுற்றார்.

(367) சீவனுள வஸ்துபோல் ஸுறத்து
திங்காய் சமைப்போர்கள் தங்களுடன்
சாவில்லான் சொல்வான் இதற்குசீவன்
சாத்துங்கோளென்று நபிபகர்ந்தார்.

(368) ரூபமெனுசிலை ஓவியங்கள்
உண்டாக்கினருட னிறைபேசுவான்
கோபமுனிவாக இதற்கு சீவன்
கொடுங்கோளென மிகவிதனஞ் செய்வான்.

(369) மனிதர்தனில் மிக அதாபுடையோர்
வளைந்தகியாமத்து நாளதிலே
ஸனமாம் சிலைரூபம் ஓவியங்கள்
சமைப்பாரெனச் சொன்னார் சங்கைநபி.

(370) இப்னுமகன் அப்பாஸுரைக்கலுற்றார்
இனிய நபியோதக் கேட்டேனென்று
புவியில் சிலை சமைத்தோர்கள் தம்மை
போடப்படுமென்றார் நரகத்திலே.

(371) சமைக்கும் கோலம் போலிவரைநாளை
தம்பிரான் கோலமாக்கி வைத்து
அமையாதெரிகின்ற நரகத்திலே
அதாபுமிகப்படுவானே யென்றார்.

(372) எந்தன் படைப்புப்போல் சமைப்பேர்ர்கள்போல்
இல்லை அநியாயக்கார ரென்று
அந்தமுள ஆதி சொல்வானென்ன
அழகாம் நபியிறஸூலு ரைத்தார்.

(373) எரியா லொருகழுகெழுந்து செல்லும்
இம்மைதனில் சிலை சமைப்போர்களை
பிரியா தெடுப்பேனென் றுரைத்தவனை
பெரிய நரகத்தில்கொடு புகுதும்.

(374) உயர்ந்த கப்றையும் சிலைகளையும்
உரமாயழித்துப் போடென்று நபி
பயந்தங் குரையாக வுரைத்தாரென
பயகாம்பர்தம்பி அலியார் சொன்னார்.

(375) ஒவியமுள்ள இல்லத்திலும்
ஊத்தை ஜுனுபாளி இல்லத்திலும்
தாவிக் குலைக்கும் நாயில்லத்திலும்
தக்கமலக்குகள் புகுதா ரென்றார்.

(376) விடையன்றியொரு அசனம் தன்னில்
விருப்பமுடன் செல்லும்போது கள்ளன்
படையாலெ டுக்கின்ற கொள்ளையாடும்
பரிசுபோல் பிறப்பிடுவா னென்றார்.

(377) முஸ்லிம் ஒருகுடல் தன்னில் தின்பான்
மோசமணுகிய காபி ரானோர்
பிசகின்றியேழில் தின்பா னென்ன
பெரியோனருள்படி நபி யோதினார்.

(378) கசந்ததுன்யாவில் நிரம்பத்தின் றோர்
கனமாம் குழாம்கூடும் கியாமத்துநாள்
பசியால் மிகுத்தோர்களென வுரைத்தார்
படையால்மிக வெற்றியுள்ள நபி.

(379) வயிறு நிரம்ப தின்றோனைக்கண்டு
வள்ளல் முஹம்மது நபியுரைத்தார்
கைறுயிருக்கு மித்தீனை நாளை
கருத்தால் தங்கரித் திருந்தாலென்றார்.

(380) தீனல் பெரும் படைப்பானோர்கள்தான்
தீரும் கியாமத்து நாளதிலே
ஈனமுள கொசுகின் சிறகிற்
கீடாக மாட்டானென நவின்றார்.

(381) வல்லவொரு சோற்றில் மிஸ்கீன்களே
வாகா யழையாமல் சீமான்களே
சொல்லி அழைத்திடப்படும் சோறுகள்
தோசமுள சோறென்றார் முஸ்லிம்.

(382) மிஸ்கீன் தனையழையாச் சோற்றுக்கு
விரும்பி நடந்தோர்கள் நபி தனக்கு
பிசகின்றி மாறு செய்தாரென்ன
பெரிய இமாம்புகாரி யுரைத்தார்.

(383) வருஷமெனும் ஆண்டு முப்பதாக
வயிற்றை நிரப்பாமல் இருந்தேனென,
வரிசையுள இமாம் அபூஹனீபா
வளர்ந்த களரியில் வாய் மலர்ந்தார்.

(384) உத்தாரமன்றி மனதையின்றி
உகந்து ஒரு சோற்றில் போனோர் சாக்கி
வித்தாரமாக நட்டமென
விளம்பினா ரெங்கள் இமாம்ஷாபியீ.

(385) குஷியாய் முஹம்மது நபியிறஸூல்
கூறுவார் இம்மைதனில் சுகித்தோர்
பசியா யிருப்பாராகிறத்திலென
பாங்கரோடு சொன்னார் பரிவாகவே.

(386) சரீரந்தனை தண்மைப் படுத்தினோர்கள்
தண்ணீரொறுத்து சோற்றினையொறுத்து
பெரியோனிடத்திலே மிகுதி சங்கை
பெறுவாரெனச் சொன்னார் ஆல நபி.

(387) தீனால் குடியினால் உங்கள் கல்பை
தீங்காய் கொலை செய்ய வேண்டாமென
மானருடன் நன்றாயிருக்குமெங்கள்
வள்ளல் முஹம்மது நபியோதினார்.

(388) குஷியாய்ப் பசியாக இருக்கிறது
கூண்ட அமல்க்கெல்லாம் அரசாமென்ன
அசையா மணி கட்டி வாழுமெங்கள்
அண்ணல் முஹம்மது நபி யோதினார்.

(389) நாளிலிருமுறை தின்கிறது
நாதன் விலகின [1] இஸ்ருபென
ஆளிலழகான நபி யிறஸூல்
அன்பாய் ஆயிஷாக்குரைக்க லுற்றார்.

(390) சுகியா லுடல் வளர்த்தோர்களெந்தன்
தோஷமுள உம்மத்தோர்களென்று
ஒஹியால் நபியுல்லா உரைத்தாரென
உண்மையுள இமாம் பஜ்ஜார் சொன்னூர்.

(391) சோறு பலவகை குடிப்பு வகை
[2] தூசுகலை [3] வகை சொல் அழகாய்
வீறு யிருப்போர்களென் உம்மத்தில்
வேண்டாமனு வென்று ரெம்மிறஸூல்.

(392) தின்பீர் குடிப்பீர்கள் வலது கையால்
சிறப்பாய் கொடுப்பீர்கள் வாங்குவீர்கள்
வம்பன் இப்லீசு இடக்கையினால்
வாகாயிவை செய்வானென்றார் நபி.

(393) வல்ல வொருவனுக்கிருவல்லிமார்
வாகா யிருந்தாக்காலவன் நீதமாய்
நல்லபடி நடந்தானில்லையால்
நாளை கியாமத்திலொருதோள் சாய

(394) அல்லல் மிகப்படுவானெனவே
அஹ்மதுநபி சொன்னாரென்ன
அலனும் பகலுமாய் முழித்துத்தொழும்
ஆலிம் நஸஇயென்போர் சொன்னார்.

(395) நெறியாய் நடப்போர்கள் கியாமத்து நாள்
நிலவினொளிவுபோல் குர்ஸி தன்னில்
செறிவாயிருப்பா ரென்றுரெனவே
ஷெய்கு அபூஹுஸைன் முஸ்லிம் சொன்னார்.

(396) உங்கள்தனில் நல்லார் ஆகிறத்தில்
உகப்பாய் [4] திரீயோடு வாழ்வாரென்ன
சங்கைநபி யுரைத்தாரெனவே
சாற்றினரெங்கள் திர்மிதியே.

---

[1] நடப்பு [2] ஆடை. [3] புடவை. [4] ஸ்திரி.

(397) முகத்திலடிக்க வேண்டாமெனவும்
மோசஉதாசீனம் சொல்லியென்றும்
அகமென்றியவள் தனைவெறுக்க
ஆகாதெனச் சொன்னார் அஹ்மதென்ன.

(398) தகுதியுளஇமாம் அபூதாவூது
சங்கை இப்னுஹிப்பானவரும்
மகுனமுடன் பேசி வந்தாரென்ன
வரிசை இப்ன்ஹஜர் வாழ்த்தினரே.

(399) வல்லிமார் தங்கள் புருஷரோடு
வாகாயிருந்தல்லல் பட்டாளாகில்
நல்லபதி சொர்க்கம் புகுவாளென்ன
நபி பேசினாரென்ன ஹாகிம் சொன்னார்.

(400) அஞ்சையும் பேணித் தொழுதுகொண்டு
அபத்தையும் காத்து புருஷனுக்கு
வஞ்சகமின்றி வாழ்ந்திருந்தால்
வாழும்பதி சொற்கம் புகுவாள் கண்டீர்.

(401) ஆயிஷா றலியல்லாஹ் அன்ஹா
அருளினார் நபிசொல்லக் கேட்டேன்
வாயினால் வல்லி மடந்தைமேலே
வலிய கடனுள்ளான் கணவனென்றே.

(402) வல்லிமார் தங்கள் புருஷருக்கு
வழிப்பட்டிருப்பது பீஸபீலின்
நலலபெருங் கூலிக் கெதிராமென்ன
நயினார் முஹம்மது நபியோதினார்.

(403) உச்சிதொடுத் துள்ளங்கால் மட்டாக
ஊனும் சீழுமாய் ஒலித்தோடினால்
இச்சையுடன் சென்று நாவினாலே
இனிதாய் உறிஞ்சினாலுமவன்றன்

(404) *துச்சமி றுத்தவளல்லவென்று
தூதர் முஹம்மது சொன்னாரென
இஜ்ஜத்தணுகிய இப்னுஹிப்பான்
ஏற்றமுள கிதாபினிலுரைத்தார்.

---

* அற்பம்.

(405) ஒருவர்க் கொருவர்தான் ஸுஜூதுசெய்ய
உண்மையுட னிருந்தாலப்போது
புருஷன்தனக்கு பெண்சாதி தண்டம்
பேணிஇட ஏவல்செய்வே னென்றார்.

(406) ஒட்டை [1] மறுகையில் இருந்தாலுமாம்
உடனே யிறங்கித்தன் புருஷனுக்கு
கெட்டியாய் வழிப்படாதவள்க்கு
கிருபையுள ஈமான் கிட்டாதென்றார்.

(407) பெண்ணைப் பிறந்தவள் வீடுவிட்டுப்
பிரிந்தாலவளுக்கு இறைமுனிவும்
விண்ணோழ் தனிலுள்ளோர் முனிவுகளும்
விரைந்து வருமென்றார் நபிகள் கோமான்.

(408) அடுப்பங்கரைதனில் இருந்தாலுமாம்
அழகாம் புருஷன்தன் கருமத்துக்கு
படுக்க வழைத்தாற்கால் உபயப்பட
வாஜிபா மென்றார் வள்ளல் நபி.

(409) காலமடங்கலும் தொழுதாலுமாம்
கணவன் முனிவானபெண் தொழுகை
கோலம்பெற அவ்ள் செவியைவிட்டு
குணமாயுயரா தென்றாரி றஸூல்.

(410) வெளியில்மணம் வீசபோற பெண்கள்
விருப்பமுடன் தொழும் தொழுகையெல்லாம்
அழியுமெனச் செர்ன்னார் நபியெனவே
அண்ணல் அபூஹுறைறு வுரைத்தார்.

(411) முற்காலந் தனிலுள்ள பெண்கள்
முனிவாய் ஹலாக்கான காரணீகம்
திக்காம் வெளிதனில் அலங்கரித்துச்
சிறப்பாய் பிறப்பிட்டபடியா லென்றார்.

(412) கணவன் முகத்தினில் கடுகடுப்பு
கருத்தாய் காட்டினோர்க்கிறை முனிவு
மணமாய் பிரியமுண்டாகு மட்டும்
வாகா யிருக்குமென்றாரி றஸூல்.

---

[1] ஒட்டகத்தின் பொதியின் ஒருபக்கம்.

(413) பெண்ணைப் பிறந்தோரில் நாலுவகை
பெரிய தீயினிற்புகுவா ரென்றார்
கண்ணாற்றெரிசிக்க ஹறாம் புருஷர்
காண அலங்காரமாய் நிற்போரும்

(414) உண்ண னுறங்காதான் வணக்கமன்றி
ஊண்தீன் தனில் பராக்காகும் பெண்ணும்
ஒண்ண வருத்தமாம் காரியத்தை
உகந்து புருஷன்மேல் போடும் பெண்ணும்

(415) வந்த புருஷனை வாயினாலே
வண்மையுரையாமல் நோவித்தோரும்
இந்த வகை நாலுவல்லியரும்
எரியும் நரகத்திலாவாரென்றார்.

(416) தலையை மறையாமல் நின்றோர்கள் தான்
தண்மை முடியின் மேல் கொளுக்கி யிட்டு
உலையும் பெருந்தாள் வில் கிடக்கிறது
உண்மை நபி கண்டேனென நவின்றார்.

(417) நாக்கில் சில பெண்ணைத் தூண்டிவிட்டு
நரகந்தனில் தூங்கக்கண்டேனப்போ
வாக்காய் ஜப்றயீலோடு கேட்டேன்
வண்மை யணுகாதாளா ரெனவே.

(418) அப்போதுரைத்தா ரென்னொடு ஜிப்ரீல்
ஆகா வ்ரையாகப் புருஷன்தன்னை
செப்பி யுரைத்தவளிவளா மென்ன
ஜப்றயீல் சொன்ன ரென்னுடனே.

(419) மார்பில் சிலபெண்ணைத் தூண்டிவிட்டு
வாகாயிருக்கக் கண்டேனப்போது
சீராம் ஜப்றயீலோடு கேட்டேன்
செப்புமிவளாரோ மொழிவீரென.

(420) நேராம் புருஷனோ டிணக்கமாக
நெறியாயணையாத மாதரென்றார்
ஆராகிலும் இந்தப்படி இருப்போர்
அதாபுதனை யஞ்சி நடப்பீர்களே.

(421) காலில் தளைபோட்டு மார்புடனே
கையில் தளையை முன்னெற்றியுடன்
கோலம்பெறக் கட்டியிருக்கும் பெண்ணும்
கொடுமை நெருப்பிலே காய்ந்ததண்ணீர்.

(422) கோலப்பெற அவள் தலையில்விட
கொடிதா யுருகியே ஆறுபோலே
ஏலவோடவே ஜிப்ரீல் சொன்னார்
இவள்தான் முழுகாம லிருந்தாளென்றே.

(423) பன்றித்தலையாக உடல் *கோகுபோல்
பளீஹத்த னுகிய கோலந்தன்னில்
கண்டு ஜப்றயீலோடு கேட்டேன்
கவல்வாரிவள் கோள்பொய் சொன்னாளென்றே.

(424) தண்மையுள நாயின் கோலம்போல
தையல்தனில் சிலபேரைக் கண்டேன்
உண்மை ஜப்றயீலோடு கேட்டேன்
உரைத்தார் ஸதகாவை சொன்னாளென்றே.

(425) இந்தவிஷபங்க ளடங்கலையும்
இனியமகள் பாத்திமாவுடனே
விந்தையுடன் சலித்தழுதழுது
விளம்பினார் வேதநபி யெனவே.

(426) பந்தமுகமுள்ள நாச்சியாரைப்
பரிவாய்க் கலியாணஞ் செய்திருந்த
இந்துநிலாவொளி போலுதித்த
எங்கள் அலியுல்லாஹ் இயம்பலுற்றார்.

(427) கண்ணின்மணியான என்மகளே
கடிந்த அதாபெல்லாம் புருஷருடன்
மண்ணில் மணமாக இராதார்க்கென்ன
வரிசைமிகவுள்ள நபியோதினார்.

(428) வீடுகனிவிருந்தாலாதிக்கு
முடுகியிருப்பாளென்று றிறஸூலில்
கூடாம்மனைதனில் சிறைப்படுத்தி
கொள்ளுங்கோ ளென்றார் நபியிறஸூல்.

---

* கோகு = கழுதை.

(429) குருடரொருதனர் வந்தளவில்
கோஜாநபி சொன்னர் கோதையர்க்கு
பரிவாய் மறைந்துகொள்வீர்களென்று
பாங்காய் மறைந்தனர் பாங்கிமார்கள்.

(430) தந்தைதனை அன்னையுடற் பிறப்பை.
சங்கையுடன் காணவேணுமாகில்
அந்தமுள கணவன் விடையால்
அழகாய் ஜியாறத்துச் செயலாமென்ருர்.

(431) கோல நிறமன்றி அழக்கணிந்து
கூசிவலமிடம்பாராமலே
ஆலமமைத்தோனே மனதிலெண்ணி
அஞ்சிஜியாறத்து செயலாமென்ருர்.

(432) புருஷனிடத்திலுண்டானதீங்கின்
பொல்லாக் குணத்திற்கு ஸப்றுசெய்தால்
அரியோனவளுக்கு அளிப்பான்கூலி
ஆயிஷாக் கீந்த கொடைபோலென்ருர்.

(433) ஆணுய்ப்பிறந்தவன் பெண்சாதியின்
அசட்டுக்குணத்துக்கு பொறுத்தாணுகில்
ஊணுனுறங்கான் அய்யூபின்கூலி
உகப்பாய்க் கொடுப்பானென்ருரிறஸூல்.

(434) குற்றம் குறையன்றி யெனேதலாகு
கூறுவாயென்று புருஷருடன்
வெற்றிபெறச் சொன்ன ஆயிழைக்கு
[1]விஸ்திலுளவாடை ஹறுமாமென்ருர்.

(435) தந்தங்குடும்பத்திலொரு பொல்லாங்கு
சங்கையணுகாமல் நடக்குதென்ருல்
பெந்தமணுகாத [2]தய்யூதுக்கு
மேலாம்பதி சொற்கம் ஹறுமாமென்ருர்.

(436) கலியாணப் பந்தல்தனில் விடுவோர்
கடலாற்புனலாடகப்று காண
சலியாமனமாக விடைகொடுத்தோர்
தய்யூதானேரில் கெட்டோர்களே.

---

[1] சொர்க்கம். [2] விபசாரத்துக்குச் சம்பந்தப்படுபவன்.

(437) வரிசைமிகவுள்ள முஃமீன்களை
வசையா யுரைப்பது பிசகெனவும்
கருதி அவரோடுவா ளெடுத்து
கைசெய்வதுகுபி ராகுமென்றார்

(438) வண்மையுள முஃமினானோர்களை
வசையாய் லஃனத்து செய்கிறது
தண்மையணுகுவோனவனைக் கொலை
சங்கையணுகாமற் செய்வோரென்றார்.

(439) வரிசை நபியுல்லாஹ் முனிந்தபேரை
வாகாயுரைக்கிறேன் முஃமினானோர்
பரிசுபெறக் கேட்டுநடந்துக் கொள்வீர்
பதியிலுள பேர்கள் அடங்கலுமே.

(440) பலிசைக் களித்தோர்கள் வாங்கினோர்கள்
பரிவா யெழுதினோர் சாக்கிக்காரர்
கிலுசை கெடுரூபம் தனைச்சமைத்தோர்
கீழாமிருகத்தோ டணைவோர்களும்.

(441) ஊரார் நிலந்தன்னை ஹக்கென்றியே
உகந்திங் கெடுத்தோரும் கண்ணில்லானை
நேராம் வழி கெடுத்தோர்களையும்
லஃனத்து செய்தார் நபியிறஸூல்.

(442) லூத்து நபிகவ்ம்கள் அமல்செய்வோரும்
நன்மையணுகாக் கள் குடிப்போர்களும்
சாத்திரம் சொல்வோர் பக்கல் வந்து
சங்கையணுகாமல் கேட்போர்களும்.

(443) வல்லி டிமார்பின்னில் அணைந்தோர்களும்
மாத விடைதன்னில் அடுத்தோர்களும்
சொல்ல ஹறாமான ஒப்பாரிகள்
சொல்லி அழுவோரும் சூழ்ந்தோர்களும்.

(444) பின்னில் தொழுவோர்கள் பொருத்தமற்ற
பிரிசமணுகாத இமாமவனும்
மன்னமனெனுமக முடையான் தன்னை
வாகாய் வெறுத்துப்பாய் அகன்றவளும்.

(445) ஆகாக் களவுகள் செய்வோர்களும்
அஸ்ஹாபிமாரை வைவோர்களும்
ஏக பெரியவன் * அம்றுநஹீ
இம்மைதனில்விட்ட பேர்களுமாம்.

(446) பூவை மார்கோலம் கொண்டோர்களும்
புருஷன் மார்வேஷம்கொண்ட பெண்ணும்
பார்வைதனில் ஸுர்மா இடாளும்
பரிவாய் மருதோன்றியிடாத பெண்ணும்.

(447) புருஷன்தனைப் பயில் வெள்ளாட்டியை
பொல்லாவுரையினால் பிரிப்போர்களும்
கருவிதனைக் கொண்டு உடம்பளவில்
கருத்தாய் இஷாறத்துக் காட்டுவோரும்.

(448) ஜக்காத்தளியானும் தன்வங்கிசம்
தள்ளியொரு வினம்சேர்வோர்களும்
ஹக்காய்உரிமை விட்டோனைவிட்டு
கருதியொருத்தன்பால் சேர்ந்தவனும்.

(449) கூடுவதனத்தில் வைத்தவனும்
துய்யபுருஷன் உத்தாரமன்றி
வீடுதனை விட்டுப் பிரிந்தவளும்
மேலோன் லஃனத்தில் ஆவாரென்றார்.

(450) கள்ளுக் குடித்தோரும் அதற்கொத்தவைசை
கருதிகருத்தாகச் செய்வோர்களும்
தெள்ளிதாய் கப்றுதனில் விளக்கு
தீங்காகவைக்கும் பேர்கள்மேலும்.

(451) கள்ளனெனும் பாவிஹத்துதன்னை
கருத்தாகச்சென்று விலக்குவோனும்
வள்ளலெனும் பெரியோனிவரை
வாகாய்முனிவா னென்றாரிறஸூல்.

(452) அயலாம் திரீயுடன் அணைந்தவரும்
ஆகாநிகாஹு கையாற்செய்வோரும்
பயலாம் அடியாரை ஹக்கென்றியே
பதற அடிப்போரும் ஆகுமென்றார்.

* ஏவல் விலக்கல்.

(453) தாயும் மகளையும் வைதோரையும்
சாடையுரைப்போரும் கைக்கூலிகள்
ஞாயஹுக்மிலே வாங்குவோரும்
நலவான இல்மை மறைப்போர்களும்

(454) தவசம்தனைக்கட்டி விலையேறவே
சங்கையணுகாமல் விற்போர்களும்
தவனமாய்வந்த முஸ்லிம்கட்கு
தகுமாயுதவி செய்யாதவரும்.

(455) கிருபை அணுகாத ஸுல் தான்களும்
கிளையோடு றவில்லா முறிந்தோர்களும்
நெறியாய் நிகாஹு செய்யாதவரும்
நிலத்தில் பித்அத்துச் செய்வோர்களும்

(456) தனியஸபர் செய்வோர் உயிர்வஸ்துவை
சாத்தியிலக்காக எய்வோர்களும்
முனிவாம் மக்றுகள் செய்வோர்களும்
மோசமுள ராகம் பாடுவோரும்

(457) கப்றுதனில் [1]பினு எடுப்போர்களும்
கப்றுதனைக் காணும் வல்லிபரும்
சபையினடுவிலேயிருப் போர்களும்
[2]ஜானிதனில் கிழடாணுமாமே.

(458) வெட்டைதனில் நிற்குநிழல் மரத்தை
வெட்டிக்களைவோரும் சொக்கட்டான்கள்
நட்டிவிளையாடும் தோசிகளும்
நாயன்களாவைப் பொய்யாக்கினோனும்

(459) வேற்றுமுடிமயிர் சேர்க்கும் பெண்ணும்
மென்மையுள சட்டை தன்னையிட்டு
ஏற்றபருமுறியுள்ளி விடார்
இவர்கள் லஃனத்திலாவாரென்றார்.

(460) எந்தன் நடவடிவிட்டோர்களும்
ஏகன் குறானைப் பேதகமாக்கியும்
அந்தமுளவல்லி தன்னைவிட்டு
அவள்தன் குழந்தையைப் பிரித்தோர்களும்.

[1] கட்டிடம். [2] விபசாரீ.

(461) இந்தவகையான பேர்களெல்லாம்
ஏகன் முஹம்மது நபிறஸூல்
சந்தமுற முனிந்தோர்களென்ன
ஜவாஜிறெனும் கிதாபில் உரைத்தார்.

(462) ஆகாஜிஞச்செய்து பிள்ளையுண்டாய்
அழகாம் கணவன் தன்பிள்ளையென்று
வாகாயுரைப்போர்கள் வரிசைப்பதி
வண்மையுடன் புகமாட்டா ரென்றார்.

(463) தகப்பன்தனை நன்றாயறிந்திருந்தும்
சங்கையனுகாமல் ஒருவன் தன்னை
உகப்பாய்த் தகப்பனென் றுரைப்போர்கட்கு
ஓசைப்பதி சொற்கம் ஹறாமாமென்ன.

(464) தகைப்பாம் குணமில்லா ஸஃதிப்னு
துய்ய அபூவக்காஸ்க் குரைத்தாரெங்கள்
பகைப்பாங் குணமில்லா நபியிறஸூல்
பகர்ந்தாரெனச் சொன்னார் பரிவாகவே.

(465) தந்தந் தகப்பனைப் புறக்கணித்தோர்
சங்கையுள தம்பிரான் தனக்கு
விந்தையுளகு பிர்செய்தாரென
வேத முஹம்மது நபியோதினர்.

(466) பாவம் தனக்கெல்லாம் போதுமாகும்
பரிவாய்ப்படி அளிக்கும்பேர்களை
நாவால் மனதினால் பொருக்தமற்று
நலவாம் படிகொடா திருப்பதென்றார்.

(467) முந்த சுவர்க்கத்தி லாவார் மூவர்
மோசமணுகிய மாற்றலார்முன்
அந்தமுடன் பட்டோர் அடியார் தம்மில்
அழகாய் இபாதத்து செய்வோர் பின்பு.

(468) பெந்து குடும்பங்கள் மிகுந்தோனுமாய்
மேன்மையுடன் ஸுவால்கேளானுமாய்
சந்தமுற விருப்போர் மூவரும்
சங்கைப்பதி முந்திப் புகுவார்களே.

(469) மூன்று வகையார்கள் முந்தமுந்த
மோசமுற விழுவார் நரகில்
ஆண்டா னுடமைக்கு ஜகாத்திடானும்
அமீறும் தலைவரில் வம்பர்களும்

(470) தாண்ட வெளியாரில் படிறுள்ளானும்
தண்மை மிகவுள்ள இம்மூவ்வரும்
தூண்டா நரகத்தில் முந்தவிழும்
தோசியிவராகு மென்றார் நபி.

(471) உனக்குமுனது பிள்ளைகளுக்கும்
உந்தன் ஹலாலுக்கும் உன் ஆளுக்கும்
கணக்காய் அளிப்பது ஜகாத்தாமென்று
காவல் முஹம்மது நபியோதினர்.

(472) உயர்ந்தகரம் தாழ்ந்த கரந்தனிலும்
உடையோனிடத்திலே வரிசையென்றும்
அயர்ந்த குணமில்லா நபியிறஸூல்
அமர்ந்த மொழியாக அருளிச்செய்தார்.

(473) அன்னை பிதாவுக்கும் குழந்தைகட்கும்
அவன்தா னுகப்பாய்ச் சென்றெழுந்திரணம்
உன்னிமனம் வைத்துத் தேடுவோர்க்கு
உண்மையுள பீஸபீல்ப்பதவி.

(474) மின்னத்துள ஆதிகொடுப்பானென்ன
மேலாம் முஹம்மது நபிசொன்னாரேர்ன்
றன்னமெளியார்க்கு அளிக்குமெங்கள்
ஆலிம்தபறுனி அருளிச்செய்தார்.

(475) இம்மைதனிலே தன் குடும்பத்திற்கு
இனிதாய்ச் செலவிட்ட ஹக்கை நாயன்
நன்மையுள தட்டில் வைப்பானென்ன
நபிமார்க்க ரசானோர் நவின்றுரைத்தார்.

(476) உந்தன் குடும்பத்திற் களிப்பதெல்லாம்
உயர்ந்த ஸதகாவா யிருக்குமென்று
முந்தமயில் வேஷமாய் மரத்தில்
முதல்வன்தனை துதித்தோ ருரைத்தார்.

(477) ஆருக்காகிலும் பெண் பிள்ளைகள்
அவனிதனிலுண்டா யிருந்தாலவன்
சீருக்கு நன்றிசெய்தால் ஆதி
ஜன்னத்தெனும் பதிசேர்ப்பா னென்றார்.

(478) சங்கையுடனொரு பெண்பிள்ளையை
தருமாய்வளர்த்து வாழ்வித்தோர்கள்தான்
தங்கப்பதி சொற்கம் தனிலென்னுடன்
தருமமாய் வருவா ரென்றிருவிரலை

(479) திங்கள்தனைப் பிளந்தொட்டிவித்த
சீமான் நபி நீட்டி காட்டினரென்
றெங்கும் திசையான இமாம்முஸ்லிம்
இனிய கிதாபினி லியம்பலுற்றார்.

(480) உண்மை நபி தம்மை கேட்டார் யார்கள்
உறுதியுள இந்தப்பதவி என்றோர்
செம்மையுடன் ஒரு பெண்பிள்ளையை
சிறப்பாய் வாழ்வித்தோர்க் குண்டாமென்றார்.

(481) உகப்பாய் வளர்த்த தாய்தந்தையரை
உறுதிப்படப் பேசி நோவிப்பது
பகைப்பாம் குபிரீனை தனக்குப்பின்பு
பாரப்பெரும் பாவமாகு மென்றார்.

(482) ஆகா உதாசீனம் செய்தபேர்கள்
அழகாய்மிக அமல் செய்தாலுமாம்
ஏகன் சுவர்க்கத்தி லேகாரென்ன
இலங்கு முஹம்மது நபியோதினர்.

(483) அன்னையெனும் பெற்றாள் சொற்கத்துக்கு
அழகாம் நடுவாச லாகுமென்று
மன்னர் நபி யுரைத்தா ரெனவே
வள்ளல் அபூதர்தா வுரைத்தார்.

(484) ஆதி திருவுளம் தாய் பிதாவின்
அழகாம் திருவுளம் தனிலுண்டென்றும்
நீதன் முனிவவர் முனிவுதன்னில்
நிற்குமெனச் சொன்னார் நிலவழைத்தோர்.

(485) வரிசையுள தாயை தந்தையரை
மனது சலிப்பாக வைதோருக்கு
அரியோன் பெரும்முனி வுண்டாமென்ன
அறுசுதனில் சென்ற நபியோதினார்.

(486) பெற்ற தாய்தனைக் கீழ்ப்படுத்தி
பெண்ணை வரிசையா யுயர்த்தினோர்க்கு
அத்த மனுகாதான் முனிவுடனே
அமரர் முனிவு முண்டாகுமென்றார்.

(487) அன்னைதனைக் காணப் பெண்சாதியை
அழகாய்வரிசை வைத்தோன் கலிமா
உன்னியுரைக்க மாட்டாதிருந்தான்
உண்மை நபி வந்தும் ஆச்சுதில்லை.

(488) மன்னர் நபி யேது குற்றமென்று
வாயாலுரைத்தபின் தாயை மனம்
கன்ன மடந்தையர் வார்த்தை கேட்டு
கடுப்பு வருத்தியதென்றார் யார்கள்.

(489) *சொன்ன மொழி கேட்டு நபியுல்லாவும்
*தோழன்மாரோடு வுரைக்கலுற்றார்
மின்னத்துளதாயை ஆள்விடுத்து
விரைதலுடன் கூட்டி வாருமென்றே

(490) வந்தவுடன் கேட்டார் பொறுப்பீரென்று
வரிசையுள தாயார் பொறுத்தே னென்றார்
அந்தமுள நபிகலிமாச் சொல்லென்
றழகாயுரைத்தபின் உரைத்திறந்தார்.

(491) எல்லா அமலிலும் மிக உகப்பாய்
இருக்கும் அமலேதென் றுரைத்தபோது
நலல பிதா அன்னை யிருவருக்கும்
நன்றியெனும் வீறு செய்வதென்றார்.

(492) நேசமுள அன்னை தந்தையர்க்கு
நெறியாக நன்றி செய்வதுக்கு
பீஸபீல் நிகராகாதென்ன
பிறையை அழைப்பித்த நபியோதினார்

* இவ்விரு கண்ணிகளும் அசலிலில்லை.

(493) தாயும் தகப்பனும் சுவர்க்கமென்றும்
தாழ்த்தல் மிகவுள்ள நரகமென்றும்
நாயன் வஹ்யதால் நபியிறஸூல்
நன்மையுள யார்களோடுரைத்தார்.

(494) வாசமுள பீஸபீலுக்கென்று
வாகா யெழுந்தோனே டுரைத்தாருந்தன்
நேசமுள அன்னை ஹயாத்தோவென்ன
நிகழ்த்தினரவர் ஹயாத்தெனவே.

(495) ஆனல் பீஸபீலும் தாய் தகப்பன்
அவர்பாலிருக்குது அவர் கால்தன்னை
ஈன மறப்பற்றிப் பிடித்து நன்றி
இனிதாகச் செய்து இருப்பாயென்றார்.

(496) தாய்க்கும் தகப்பனுக்கும் நன்றிகள்
தருமாகச் செய்தோர் ஹயாத்தைநீழம்
ஆக்குவான் ஆதியெனவுரைத்தார்
அன்பியாக் கெல்லாம் அரசாய் வந்தோர்.

(497) குடல்வாய் முறித்தோரும் தாய்தந்தையை
குன்றமனது நோவித்தோர்களும்
கடலேழ் அமைத்தோனின் சொற்கவாடை
காணுரெனச்சொனர் ஹபீபிறஸூல்.

(498) பெங்கை முறித்தோர்கள் என்னுடனே
விரும்பியிருக்க வேண்டாமெனவே
தந்திதனிலேறி நாளை வரும்
சங்கை முஹம்மது நபி சாற்றினர்.

(499) வங்கிசம் தன்னை முறித்திருக்கும்
வண்மை யணுகாதா னிருக்குகின்ற
சங்கை யணுகாத களரிதன்னில்
தக்கோன் றஹ்மத் துண்டாகாதென்றார்.

(500) இனத்தை முறித்தோர்கள் இருக்குகின்ற
இலஃனத் திறங்கிய களரிதனனில்
கனத்த வரிசை யுண்டாகாதும்பர்
கணித்த இரணம்கொண் டிறங்காரென்றார்.

(501) சுற்றத்தாருடன் முறிந்தோர்களை
துய்ய பெரியவன் முறிவானென்றும்
வெற்றியுடன் சேர்ந்த பேர்கள் தம்மை
விண்ணே மமைத்தோனும் சேர்வானென்றார்.

(502) பெந்து மனுவுடன் இணங்காமலே
வெறுப்பா யிருக்கின்றோர் தங்களுக்கு
கெந்தமுள சொற்கம் ஹறாமாமென
கிருபை முஹம்மது நபியுரைத்தார்.

(503) வரிசையுள முஹம்மது பாகிறு
வாகா யுரைத்தார் ஜெய்னுல் ஆபிதீன்
பிரிசமா யென்றே டுரைக்கலுற்றார்
பேணிப் பயந்துக்கொள் குடல்வாய் தன்னை

(504) பிரிந்து வெறுத்தோரைச் சேர்ந்திராதே
பெரியோன் லஃனத்துண்டவர்களுக்கு
அரியோன்புர்கானில் மூன்றிடத்தில்
அழகாயிருக்கக் கண்டேனே யென்றார்.

(505) குடும்பந்தனி லெளியாரிருக்க
கூறும் கீர்த்திக்காய் ஸதக்காச் செய்தால்
கெடும்பாம் ஸதகாவை படைத்த நாயன்
கிருபையுடனே தான் கூட்டானென்றார்.

(506) வரிசையுள் முஸ்லிம்கள் தன்னை
மனது வெறுப்பாய் நாள் மூன்றுக்குமேல்
பரிவாயிருப்பது ஹறாமெனவே
பகர்ந்தார் முஹம்மது நபியிறஸூல்

(507) மூன்று நாளைக்கு மேலாகவே
முனிவாய் வெறுத்திருந்தாலவர்கள்
ஆண்ட பெரியவன் சுவர்க்கத்திலே
அழகாய்ப் புகுதாரென்று றிறஸூல்.

(508) உடப்பூரம் முஸ்லிமை ஓராண்டாக
உள்ளம் பொருந்தக் கேடாயிருக்கில்
கெடுப்பாய் அவன் சோரி யோட்டிவிக்கும்
கேடாம் பெரும்பாவம் போலாமென்றார்.

(509) தாட்சியெனும் ஸலாம் செப்பினோர்கள்
தகுமாய் வெறுப்பை விட்டகல்வாரென்று
காட்சி முகத்தினில் செய்துவந்த
கருணை முஹம்மது நபி யோதினர்.

(510) ஷஃபான் தனில் ஆதியிருவரன்றி
சங்கை முஸ்லிம்கள் குற்றம்தன்னை
தருமாய் பொறுப்பானென்றுரிறஸூல்
தவறும் இருவரைச் சாற்றக்கேளீர்.

(511) வெறுப்பாமிருவரும் கொலைகள் செய்யும்
வேண்டா மனிதரும் இவர்கள் பாவம்
குறிப்பாய் பொறுக்கப்படாதெனவே
கொழுந்து நறைவீச எழுந்தோர் சொன்னர்.

(512) வரிசை நபியுல்லாஹ் அபூதர்றுக்கு
வாகாய் வஸிய்யத்துச் செய்தது கேள்
பிரிசமுடன் பார்த்து நடந்துக்கொள்வாய்
பிரியும் பூமியில் எளியார் தம்மை

(513) கருதா மனங்கொண்டு சீமான்களை
கண்ணால் தெரிசித்து பார்க்கவேண்டாம்
அரியோன் தனக்காக மிஸ்கீன்களை
அகத்தாலுவந்து நீ முடுகுவாயே.

(514) இனத்தோ டுறவாடி யிருந்துகொள்வாய்
ஏக பெரியவன் காரியத்தில்
கனத்த வடுவான பழிப்புகளை
கல்பால் பயப்பட வேணுமென்றார்.

(515) வல்லபீஸபீல்தனில் மரித்தோர்
மருவும் வஸிய்யத்து மறந்திருந்தால்
தொல்லை நரகத்திலாவா ரென்ன
துய்ய நபியுல்லாஹ் தொகுத்துரைத்தார்.

(516) அடியார்களை நல்லபடியாளாமல்
அநியாயமாக ஆண்டவர்கள்
படியாம் சுவர்க்கத்தில் புகுதாரென்ன
பயனாம்பர் ஆலநபி யோதினர்.

(517) எம்மாத்திரம் குற்றம் தினங்கள்தோறும்
எங்கள் அடியார்க்கு பொறுப்போமென்ன
சும்மா வுரைபேசார் தமை கேட்டபின்
சொன்னார் எழுபது குற்றமென்றே.

(518) உங்களடியார்கள் தொழுது கொண்டால்
உகப்பாமுடற் பிறப்பாகுமென்று
திங்கள் முஹம்மது சொன்னாரென்ன
சித்தீகபூபக்கற் செப்பலுற்றார்.

(519) கைக்கீழ் அகப்பட்டவுடற் பிறப்பை
கனமாய் நடத்துங் கோள்பிள்ளை போலென்
றெக்காம் வுரைபேசா நபியிறஸூல்
இனியமணி வாயா லெடுத்தோதினார்.

(520) ஏலும்படி வேலை நீங்கள் கொண்டு
ஏலா அமலிலும் ஒத்தாசைகள்
கோலம் பெறச்செய்து இருப்பீரென்ன
கோமான் தனைக்கண்ட சீமான் சொன்னார்.

(521) உங்கள் உடையிலும் அன்னத்திலும்
உகப்பாம் குடிப்பிலும் சரியாகவே
சங்கையுடன் நன்றாய் நடத்துமென்ன
தம்பிரான் நபி சாற்றினரே.

(522) கையாட்சியான உயிர் வஸ்துவை
கருதி கருத்தாகப் பேணி நன்றி
ஐபமறச் செய்து இருங்கோளென்ன
அழகாய் மவ்த்தாமபோதருளிச் செய்தார்.

(523) உங்கள் தனக்கொற்று வராதிருந்தால்
உடையோன் படைப்பை வேதனைகள் செய்யாய்
சங்கையாய் விற்றுக் கொள்வாயென்ன
தம்பிரான் நபி சாற்றினரே.

(524) ரத்தம் தசையென்பு தாய் தகப்பன்
நெறியாகச் சரியானோர்களை
கத்தியடித்திட சரியல்லவே
கருத்தாகப் பேணிக் கொள்வீர்களே.

(525) நெர்க்கமனுகாமல் அடியார்களை
நெறிகேடனுகியே மிகவே தனை
ஹக்கென்றி செய்தோர் மக்கநபி
கருணை ஷபாஅத்தை யெற்றார்களே.

(526) அநியாயமாக ஒரு முஃமினை
ஆகாக் கொலையாகக் கொல்வதிலும்
துனியா அடங்கலும் நீங்கிறது
துய்யோனிடத்தி லேசாகுமென்றார்.

(527) வானோரடங்கலும் புவியோர்களும்
வாகாய் ஒரு முஃமின் சோரைதன்னில்
ஈனமறக்கூட்டா யிருந்தோர்கள்தான்
எரியும் நரகத்தில் வீழ்வாரென்றார்.

(528) முடியும் கியாமத்தில் முதற்கேள்வியாய்
மோச மனுகாதான் கேட்குமது
கொடுமையுள கொலைக் கருமமென்ன
குருவாம் முஹம்மதுநபி கூறினர்.

(529) வார்த்தை விசுவாசம் தன்னை நம்பி
வந்தோர் தமைகொலை செய்தோர்கள்தான்
ஏற்றமுள சொர்க்கவாடைதனை
யெற்றாரென சொன்னாரெம்மிறஸுல்.

(530) வாளாலிரு முஸ்லிம் எதிர்த்தால்
வம்பாய்க் கொலைசெய்தோனும் பட்டோனும்
தாளா தெரிகின்ற நரகம் தன்னில்
தான்வாரெனச் சொன்னார் சங்கை நபி.

(531) கொலைபாதகம் செய்தோன் கருமமிது
கொலையில் இறந்தவன் கருமமேதென்
றலையா நபிதம்மை கேட்டளவில்
அருளினாரவன் முந்தாவிட்டால்.

(532) பெலமாக இவன்தனைக் கொல்லவே
பிரிசமனம் வைத்து இருப்பானென்று
கலையாம் அறிவுள்ள இமாம்நஸயி
கனத்த கிதாபினில் எடுத்தோதினர்.

(533) எந்தவகை கொண்டும் தம்மை கொலே
இம்மைதனிற் செய்தோர் தம்மைநாளே
அந்தவகைகொண்டு அரியநாயன்
அதாபுபடுத்துவான் நரகிலென்ருர்.

(534) தன்னேக்கொலேசெய்து செத்தவர்மேல்
சங்கை நபி தொழ மறுத்தாரென்ன
சன்னவுரை பேசா இப்னுஹிப்பான்
சங்கை கிதாபினில் உரைக்கலுற்ருர்.

(535) வருத்தம் தனக்காக ரோசத்துக்காய்
வம்பாகத்தன்னே கொலேசெய்பவர்
பெருத்த நரகத்தில் ஊழிகாலம்
பெரியோன் அருள்ப்படி கிடப்பாரென்ருர்.

(536) தன்னேக் கொலேசெய்ய ஆகுமென்ன
சாற்றுவோர் ஆதி வேதத்திற்கு
உன்னி யகீன்கொள்ளாக் காபிரென்று
உலமாவடங்கலும் வுரைத்தார்களே.

(537) நான்று மவ்த்தானோர் குத்திக்கொண்டோர்
நாக்குப்பிடுங்கினோர் தீக்குழித்தோர்
ஈண்டு வகைகொண்டு இறநதோரெல்லாம்
எரியும் நரகுக்கு இரையாவாரே.

(538) ஹக்கென்றி முஸ்லிம்கள் தம்மை
கருதி அடித்தோர்கள் தங்கள்மேலே
சக்கென்றி ஆதிமுனிவானென்ன
சங்கை அபூஉமாமத் துரைத்தார்.

(539) ஒருவன் ஒருவனே அச்சமாக்க
ஒண்ணுது ஹறாமாமெனவே
குருவாயுதிப்பான நபியிறஸூல்
கூண்டகளரியில் கூறலுற்ருர்.

(540) உடப்பாம் முஸ்லிம்கள் தன்னளவில்
உரத்த இரும்பதை நீட்டினோர்மேல்
கடப்பாய்க்க கனுள்ளோர் முனிவாரென்ன
கடல்போல் கொடையுள்ள நபியோதினர்.

(541) அச்சப்படுத்தினோர் முஃமீன்களை
அவர்கள்தனை ஆதி கியாமத்துநாள்
கொச்சைப்படுத்துவா னெனவுரைத்தார்
கோஜா முஹம்மது நபியிறஸூல்.

(542) சூனியம் பில்லி மாய்கை அமல்
தீங்காய்ப் படிப்பதும் செய்கிறதும்
ஈனமுள பெரும் பாவமென்ன
எங்கள் முஹம்மது நபியோதினர்.

(543) வள்ளல் அபூஹனீபா மாலிக்கும்
வரிசையுள இமாம் ஹன்பலியும்
தள்ளுண்ணும் காபிராவாரென்ன
சங்கை கிதாபினில் உரைத்தார்களே.

(544) சூனியம் செய்வோர்கள் தம்மை
சுறுதியாய்க் கொல்லுங்கோ ளெனவே
மானும் புலியுமாய் ஒருதலத்தில்
வாழப்பதியாளும் உமறு சொன்னர்.

(545) வரிசையுள உமர்மகள் ஹப்ஸா
வஞ்சனைசெய்த அடியாள் தன்னை
கருவிதனைக்கொண்டு வதைக்கச்சொன்னர்
கருதி ஒருவீச்சாய் வதைத்தார்களே.

(546) எழுதி புதைப்போரும் முடிவோர்களும்
இதுபோல் வகையான கருமம்செய்வோர்
பழிசேராணுகிய சூனியத்தில்
பாங்கா யகப்படும் பாவிகளே.

(547) எதாகிலும் தன்மேல் கட்டிக்கொண்டால்
இறையோன் அவன்பக்கல் சாட்டிவிப்பன்
நாதன்களா வென்று விசுவசித்தால்
நல்ல அரணு னபிலமாகுமே.

(548) மார்க்கநெறி அறியாதோர் பக்கல்
வாங்கி குழிகைகள் கட்டுவோரும்
பேய்க்கென் றெருவஸ்துக் கழிப்போர்களும்
பிரிசமணுகாத காபிரென்றார்.

(549) மார்க்க நெறியில்லாக் கருமங்களை
வருடிவிரும்பினோர் பொருத்தமானோர்
தீக்கீழ்கிடந்து வேவாரெனவே
சிறப்பாம் உலமாக்கள் செப்பினரே.

(550) வசைகேடு கொண்டபேர்களுக்கு
வண்மையுடன் ஓதிப்பார்க்கவென்றால்
பிசகில்லா தீனின் காரியத்தால்
பிரிசமுடன் ஓதி பார்க்கவென்றார்.

(551) தலைமைக் கிருப்போரை கியாமத்துநாள்
தழல் சங்கிலிகொண்டு பூட்டப்படும்
பிலமாம்நெறிவந்து தானுடைக்கும்
பிரிந்தால் நெறிதியில் வீழ்வாரென்றார்.

(552) தோழர் அபூதர்றுக் குரைத்தார் நபி
துனியாத் தூரங்களை தேடாயென்றார்
ஏழைய தீம்கள்தன் முதலைவாங்கி
இகலி கியானத்துச் செய்யாயென்றார்.

(553) தலைமைக் கிருப்போர்க்கும் குறிசொல்வோர்க்கும்
தண்மை அமாணம் கையாடுவோர்க்கும்
அலமாம் விதனங்கள் மிகுந்திருக்கும
அழலாம்வைல் எரிவிதியாமென்றார்.

(554) அறுபது ஆண்டாய் பாவம்செய்து
அல்லும் பகலுமாய் இருப்பதிலும்
குறிகேடணுகாத வோர்ஸாஅத்தில்
குணமாய் நெறிபேசி யிருப்பதென்றார்.

(555) தொண்ணூறு பீஸபீல் தனிலும்
துலங்கும் ஒருபேச்சு நெறியாகவே
அல்லலணுகாத நியாயமாக
அழகாயுரைப்பது ஏற்றமென்றார்.

(556) ஆதிதனக் குகப்பான பேர்கள்
அத்லாய் நடத்தின அரசரென்றும்
நீதிநபி யுரைத்தா ரெனவே
நெறிசேர் தப்ஸீரிளி நிகழ்த்தினரே.

(557) அநியாயம் செய்யும் காளிதன்னை
அகல்வான் பெரியவன் அஜாஜீலென்போன்
இனிதாய் அவனைச் சேர்ந்திருப்பானென்ன
இறஹ்மத்தாய் வந்த நபியோதினர்.

(558) வானம்தனிலுள்ள துறைய்யாவுடன்
வம்பன்தனைத் தூக்கிக் கட்டவிழ்ந்து
ஈனமணுகிய புவியில்வீழ
இனிதாய் மனது வைத்திருப்பதென்றார்.

(559) அநியாயமான தலைமைக்காரர்
அழகாம் சுவர்க்கத்தின் வாடைதன்னை
இனிதாய் பெறமாட்டாரெனவுரைத்தார்
இலங்கும் முஹம்மதுநபி யிறஸூல்

(560) அரசாய்புவியாண்டோர்க் கியாமத்துநாள்
அழலாம் நரகத்தில் எழுபதாண்டாய்
பிரியாச் சுரிவோடு வானெனவே
பெருமாண் முஹம்மது நபியோதினர்.

(561) கடிந்த அகாபுள்ளோர் கியாமத்துநாள்
கருணையணுகாமல் தலைமைசெய்வோர்
கொடிய அரசர்கள் எனவுரைத்தார்
கொடையால் அழகான நபியிறஸூல்.

(562) அநியாயம் செய்ய துரமெடுத்தோர்
அவர்கள் ஷஹாதத்துக்கலிமா தன்னை
முனிவாய் பெரியவன் கூட்டானென்ன
மொழிந்தார் முஹம்மது நபியிரஸூல்.

(563) வழிகேடணுகிய தலைமைக்காரர்
வணக்கம் தனை ஆதிகூட்டானென்ன
எளியமிஸ்மீன்கள் மேலுவப்பாய்
இருக்கும் முஹம்மது நபியோதினர்.

(564) ஓர்ஸாஅத்தில் நெறியாய் நடத்தல்
உகப்பாம் அறுபதுஆண்டு தவம்
சீராயிருப்பதில் ஏற்றமென
சீமான் முஹம்மதுநபி யோதினர்.

(565) வம்பாம் அநியாயம் கியாமத்துநாள்
வளையும் இருளாக இவனையென்று
துன்பமணுகாத நபியிறஸூல்
தொகுத்தாரெனச் சொன்னார் இப்னுஉமற்.

(566) வம்பில் அகப்பட்டோர் துஆஇரப்பை
வல்லோன் கபூலாக்குவானெனவே
இன்பமணிவாயால் நபிசொன்னாரென்
றெங்கள் அஹ்மதுஇமா முரைத்தார்.

(567) என்னைத்தவிர ஒத்தாசை யில்லா
எளியூர்தனை ஆகா அநியாயங்கள்
உன்னியுரமாக செய்வோர்கள்மேல்
ஓங்கிவருமெந்தன் அதாபெனவே.

(568) வன்னிசுவர்க்கம் வான்புவி படைத்த
வல்லோன் உறுதியாய்ச் சொன்னானென்ன
மன்னர் முஹம்மதுநபி இறஸூல்
வாழும் மனிதரோடுரைத்தனரே.

(569) அரசர் தலைவாசல் அடுக்குமட்டும்
ஆதிறஹ்மத்தின் வாசல்விட்டு
பிரிவா யகன்றுபோவா ரெனவே
பேரால் அழகான நபிமொழிந்தார்.

(570) மன்னர்தலைவாசல் ஏகுவோர்கள்
வலியபித்னாவில் ஆவாரென்ன
கன்னல்மதுரம்போல் மொழிகள் செப்பும்
கண்ணின்மணியான ஹபீபோதினார்.

(571) ஆகா அரசர்தம் அதம்பத்துக்கு
ஆராகிலும் ஒத்தாசை யுதவி
வாகுபெறச் செய்தால் என்ஹவ்ளினில்
வாராரெனச் சொன்னார் நபியிறஸூல்.

(572) இல்லாப் படுபேச்சை யுரைப்பவர்க்கு
எரியும் நரகத்தின் கபாலம் தன்னை
அல்லாஹ் புகட்டுவா னெனவுரைத்தார்
அண்ட மடங்கலும் சென்றநபி

(573) ஆதிவிதித்த ஹறத்தானவையை
அகற்றிஷபா அத்துச் செய்வோர்கள் தான்
நீதியெனும் நாயனுடன் பிணங்கி
நெருங்கிப் பகைத்தவனகு மென்றூர்.

(574) ஹக்கென்றி வழக்குரைப்பாருக்கு
கருத்தாயுதவி யொத்தாசை செய்தோர்
சக்காம்பிச கன்றியிறை கோபத்தின்
தன்மையணுகியே யிருப்பாரென்றூர்.

(575) சங்கையுள முஸ்லிம்கள் தம்மை
தண்மைப் படுத்திநோக்காடு செய்தோர்
பங்கமிகவுள்ள முனபி கென்றே
பகர்ந்தார் முஹம்மதுநபி யிறஸூல்.

(576) உண்மை முஸ்லிம்கள் தங்களுக்கு
உதவியாதொரு வருத்தம் தீர்த்தால்
தண்மை யணுகாதான் கியாமத்துநாள்
ஸப்யீன் வருத்தத்தைத் தீர்ப்பானென்றூர்.

(577) முஸ்லிம் கருமத்தில் முயன்றோர்கட்கு
முப்பதுடன் நாலு பத்தாயிரம்
குஷியாய் இறைவனை வணக்கஞ்செய்யும்
குடிலோர்து ஆத்தேடி நிற்பாரென்றூர்.

(578) உடப்பாம் முஸ்லிம்கள் குற்றம்தன்னை
உலகர்த்னை விட்டும் மறைப்பானகில்
கடப்பாம் பிழையெல்லா மிவனுக்காதி
கனமாம் மஹ்ஷரில் மறைப்பானென்றூர்.

(579) தீங்குதனைக்கண்ட ஹஊஸா வுடனே
செப்பினர் நபிமாங்கிசம் நீர்
பாங்காயுடுத்த வுன்னுடைகொண்டு
புரிவாய் மறைத்தாக்கால் கைருமென்றூர்.

(580) ஈனமிகவுள்ள ஜினத்தனக்கு
இயல்பாய் முடுகவேண்டாமெனவே
வானேழ் அமைத்தவன் குருனயத்தில்
வரிசைநபி தமக்குரைக்கலுற்றூன்.

(581) ஆகாஜிஞ தனைப்பொருந்திச் செய்தோர்
அழகான முஃமினல்லவென
ஏக முஹம்மது சொன்னரென்ன
இயம்பினர் திர்மிதீ நஸாயீ.

(582) ஆராகிலும் ஜிஞச் செய்தாலவன்
அழகான ஈமானவனைவிட்டு
சீராய்க்கழலும் சட்டை போலெனெ
தீங்கில்லா நபி திறந்தோதினர்.

(583) வண்மையனுகாத் ஜிஞச்செய்தோர் தன்
வரிசையுள்ள ஈமான் கழ்ன்றவன்மேல்
வெண்மைக் குடைபோலாய் நிற்குமவன்
மீண்டால் தவ்பத்தால்மீழு மென்றார்.

(584) தீங்காய் ஜிஞச்செய்தோர் முகம்நெருப்பாய்
தீரும்மஹ்ஷரில் எரியுமென்று
பாங்கரொடு பேசியுரைத்தா ரெங்கள்
படையார்க்கிளையாத நபியிறஸூல்.

(585) பொல்லா ஜிஞவான கருமத்திற்கு
போதற் பயப்படுவேனுங்கள்மேல்
அல்லாஹ்தனையஞ்சி ஜிஞச்செயலே
அகல்வீரெனச் சொன்னர் ஆலநபி

(586) வரிசை மிகவுள்ள ஷஃபான்பாதி
வண்மையிரவையில் இரப்போர்துஆ
பெரியோன் கபூல்செய்வான் ஜிஞச்செயலால்
பிழைக்கும் மடந்தையர் ஆயக்காரர்

(587) கருதியிரக்கின்றது ஆவை ஆதி
கைக்கொள்ளானென்றார் காவல்நபி
பரிசுபெற வுரைத்தாரெனவே
பாரஇமாம் ஹன்பலீ யுரைத்தார்.

(588) தன்னூறடுப்புப் போலொரு பொதும்பில்
தணலாயெரிந்திட வதிற்சிலபேர்
வன்னியுயரும் போதுயர்கின்றார்கள்
வாகாயொடுங்கும் போதொடுங்கின்றார்கள்.

(589) என்னையழைத்து வந்தோருடனே
இயம்பினே னிவரா ரெனவே
மன்னர் ஜப்ராயீல் உரைத்தாரிவர்
வடுவாம் ஜினுச்செய்த பெண்ணுணென்றே.

(590) நிகாஹறு செய்துஜினுச் செய்தபேரை
நீதிஇஸ்லாமை விட்டோர்களை
ஹக்காய் கொலைசெய்ய ஆமெனவே
சுகனெறி மீளவந்தோர் சொன்னுர்.

(591) அறுபது ஆண்டாய் இரவு பகல்
அமலாய்த் தொழுததும் ஒரு ஜினுவும்
நிறையால் நிறுத்தபின் ஜினுவின் குற்றம்
நிலத்தில் பணிந்த தென்றுரிறஸூல்.

(592) வண்மையனுகாத ஜினுச் செயல்மேல்
வாகாய்த் தரிப்பாக இருக்கின்றவன்
தண்மையனுகிய புத்துகானை
சாத்தி வணங்கினேன் போலாமென்றுர்.

(593) முனிவாம் ஜினுவுக்குப் பொருத்தமாகும்
மோசமனுகிய வைத்தானுக்கு
சனியாம் இப்லீஸு மிகவுகப்பாய்
தாஜு முடிதனை கொடுப்பானென்றுர்.

(594) தண்மை மிகவுள்ள ஜினுச்செயலை
தருமாய்ப் பயந்தஞ்சி விட்டோர்கள்தான்
உண்மைப் பெரியவன் அர்ஷின்கீழே
உருகும் கியாமத்தில் ஆவாரென்றுர்.

(595) ஈனமுள ஜினு தன்னைவிட்டு
எவராகிலும் பேணிபிருந்தாராகில்
ஜீனத்துள சொர்க்க மவர்க்குண்டென
செருப்போடறு ஷேறிவந்தோர் சொன்னுர்.

(596) சங்கைநபி சொன்னுர் மஹ்ஷறிலே
தண்மையுள பெரும் நாற்றமுண்டாம்
பங்கமுள நாற்றமே தெனவே
பகர்வார் படைப்புகள் தொனியுண்டாகும்

(597) முங்கிஜிணுவிலே தரிப்பாகவே
மோஷமணுகிய பேர்களுடல்
லிங்கம் தனிலுள்ள நாற்றமென்றே
இடிபோல் தொனிவரும் முனிவாகவே.

(598) இரண்டு அலகுக்கும் இருதாளுக்கும்
இடையிலுறுப்புரண்டையும் பேணினால்
வென்றியுள சொர்க்கப் பிணையானென்ன
வெளிமானுடன் பேசி நின்றோர் சொன்னார்.

(599) மூன்றுமுறை நபி லஃனத்திட்டார்
முறைகேடணுகிய பின்புறத்தில்
வேண்டாச் செயல்செய்யும் பேரையென்று
வேதவுரை பேசும் நஸயீ சொன்னார்.

(600) பின்னிலடுத்திடக் கண்டீர்களேல்
பிரியாதிருவரைக் கொல்வீரென்று
மன்னர் நபி சொன்னா ரெனவுரைத்தார்
வரிசையிமாம் அபூதாவூ தென்போர்.

(601) ஏறும் இருவராண் பெண்ணுகிலும்
இந்தச் செயல்விட்டுத் தவிர்ந்தில்லையேல்
வீறும் ஷஹாதத்துக் கலிமாதன்னை
மேலோன் கபூலாக்கா னெனவோதினார்.

(602) ஆதி பெரியவன் முனிவாகவே
ஆகாத் துவாரத்திலடுத்தோர்களை
நீதமுடனோக்கா னெனவுரைத்தார்
நெறியாம் முஹம்மது நபியிறஸூலில்.

(603) புத்திதனை போக்கும் வஸ்துக்களும்
பொல்லா மயக்க முண்டாக்குவையும்
வெற்றியணுகாத ஹறாமெனவே
விசும்புகவிகையாய் வந்தோர் சொன்னார்.

(604) போதம் கெடுக்கின்ற கள் குடித்தால்
போற்றலுள ஈமான் கழலுமென
நாதர் முஹம்மது உரைத்தாரென
நலவான இமாம் ஹாக்கிம் சொன்னார்.

(605) கள்ளு நிலைப்படக் குடித்தவனும்
கருணையுள பந்தை முறிப்பவனும்
தெள்ளிதாய் சொற்கம் புகுதாரென்ன
ஜீனத்தழகான நபியோதினார்.

(606) நாற்றமிகவுள்ள கள் குடித்தோர்
நாளை கியாமத்தில் விடாயாகவே
நாற்றமணுகியே வருவாரென்ன
நபிமார்க்க ரசான நபியோதினார்.

(607) நாற்பது நாளாய்ச் செய்ததவம்
நாயன் கபூலாக்கான் கள்ளொருக்கால்
கூர்ப்பா யருந்தினோர்க் கென்றுநபி
கூறினார் கூண்ட களரியிலே.

(608) கள்ளுக்குடித்தபின் மவ்த்துவந்தால்
காபிராய்ச் சாவானென ஹதீதில்
தெள்ளிதாய் வந்து இருக்குதென
ஷெய்கு அஹ்மது செப்பினரே.

(609) ஆகாப் பெரும்பாவ மடங்கலுக்கும்
அமளிப் பெரும்பாவம் கள் குடியென்
றேகன் நபி செப்பினரெனவே
ஏற்றமுள இப்னஅமீ றுரைத்தார்.

(610) எட்டிலடங்காத பித்னவுள்ள
இப்லீஸ் சிறு நீரினலே
கூட்டி யெழுந்த பொல்லா இலையை
கூட்டாதே யென்றார் கோமான்நபி.

(611) கஞ்சா அப்யூன் அம்பர் மாஃஜூன்
கனதிகெடுக்கின்றமது ஆமத்து
பொஞ்சா ஹறுமென்று உரைத்தா ரெங்கள்
புவியில் உலமாவில் பெரியோர்களே.

(612) புகையிலை தன்னில்உள பித்ன
புகலில் அரிதாகும் கெடும்புக்கெல்லாம்
முகமாயிருக்கும் பொல்லா இலையை
முயன்று விரும்பினோர் ஷைத்தான்களே.

(613) ஹறுமென்றறிந்துபின் குடிப்போர் தின்போர்
கருத்தாய் பயிர்செய்வோர் கொண்டுவிற்போர்
குருனின்படி ஈமான் கொள்ளாரென்ன
குறித்த வுலமாக்கள் கூறினரே.

(614) கொள்ளி ஷைத்தான்கள் போலாகவே
குறிகேடுள புகையிலை குடித்தோர்
பள்ளிதனில் வரவிலக்கா மென்ன
பகர்ந்தார் உலமாக்கள் பரிவாகவே.

(615) தூளாய் பொடியாக்கி நாசிலேற்ற
தூய்மையணுகாத ஹறுமெனவே
தோழாமை செய்ய இணக்கமான
தூய்யவுலமாக்கள் தொகுத்துரைத்தார்.

(616) குர்ஆனெனும் ஓதியானோர்களில்
குறிகேடனாகிய சில பேர்கள்தான்
ஷர்ரும் இலைகுடிப்பார் தின்பார்கள்
ஷைத்தான்தனிற் கெட்ட ஷைத்தான்களே.

(617) அறுதிமாறுதல் பொய் சொல்லுதல்
ஆகாச் சதிமானம் செய்குதலும்
குறிகேடனாகிய மூனுபிகுதன்
குணமாமிவை யென்று நபி கூறினார்.

(618) தெளிவாக ஈமான் கொண்டானில்லை
தீங்கான தர்க்கம் மேலும் பொய்யை
மொழியாமல் விட்டாலொழிய வென்றார்.
முன்னாள் மயில் வேசமாய்த் துதித்தோர்.

(619) வாகாய் ஏக்கீனீமான் கொண்ட முஃமின்
வண்மையணுகாப் பொய்யுரையா னென்ன
காஹா நகர்தனில் நாகம்தன்னை
கருவிதனைக் கொண்டு அரிந்தோர் சொன்னார்.

(620) குழந்ததனைப் பார்த்து வாவுனக்கு
குணமாயொரு வஸ்து தருவேனென்றால்
மொழிந்தது கேட்டு வந்தளவில்
முயன்று கொடாவிட்டால் பொய்யாமென்றார்.

(621) சிரிப்பு வருத்தவே பொய்புரைகள்
தீங்காகப் பேசும் தோசிபர்க்கு
எரிப்பு மிகவுள்ள வைல் நரகம்
எதிர்க்குமெனச் சொன்னு ரெங்கள் நபி.

(622) அமளி தனக்காக பொய்சொல்லுதல்
ஆகுமெனச் சொன்னர் உலமாக்கள் தான்
சமதமனுகாத பொய்புரையை
தரணிதனிலுள்ளோர் தவிர்ந்துகொள்வீர்.

(623) பொய்யான ஆணைச் சத்தியங்கள்
புகன்று ஒருதன் ஹக்கை யெடுத்தால்
மெய்யாம் உயர்சொர்கம் ஹறுமாமென்று
விதியாம் நரகென்றும் இறஸூல் சொன்னர்.

(624) ஷஹாதத்தெனும் சாக்கிதனை மறைத்தோர்
சங்கையனுகாத பொய்ச் சாக்கிகள்
அகாவி யுரைத்தோர்கள் போலாமென
அருக்கன் தனைமீள அழைத்தோர் சொன்னர்.

(625) பொய்யான சாக்கி செப்புவது
பொருந்தா இணைக்கெதிராகுமென்ன
கையால் ஒருபிடி மண்ணெடுத்து
கனமாம் படைதனில் எறிந்தோர் சொன்னர்.

(626) வல்லவொரு ஊரில் கொள்ளை நோவு
வல்லானருட்படி வந்ததென்றால்
கொல்லுமிது வென்று ஓடினோர்கள்
குப்பார் படைபயந்தோடி யென்றார்.

(627) ஊராலொருவூரில் கொள்ளை நோவு
உளதேல திற்போகவேண்டா மென்று
சீராயதிலிருந்தாற் பிரிய
சீரல்ல வென்றார் நபியிறஸூல்.

(628) கொள்ளை நோவுக்கு ஸப்றுசெய்து
குடியாயிருந் திறந்தோர்களுக்கு
தெள்ளிதாய் பீஸபீலின் கூலி
சீராய் கிடைக்குமென்று ரிறஸூல்.

(629) நன்மைதனையேவி தீங்கை நீக்கி
நலமாயிரா னம்மில் இல்லையென
தின்மை அணுகாத நபியிறஸூல்
செல்வமணி வாயால் செப்பினரே.

(630) தீங்குதனைக் கண்டால் நீங்கள் கையால்
திறமாய் விலக்குங்கோ வதுக்குப்பலம்
பாங்காயிராவிட்டால் வாயினாலே
பரிவாய் விலக்குங்கோ வதுதனக்கும்

(631) தாங்கும் பெலமில்லா திருக்கில் கல்பில்
சந்தோஷமில்லாமல் விளகி
நீங்கியவடம்விட் டெளுங்கோளென
நெறிசேர் முஹம்மது நபியோதினார்.

(632) மனிதர்தமை யேவி நன்மைகொண்டு
வாகாய் மறந்தவர் தமக்குவமை
கனமாய் எரிகின்ற தீப்போலென்ன
கையின் திரும்புவாளானோர் சொன்னார்.

(633) நாவினால் ஏவி விலக்கற்செய்து
நன்றாய் நடவாத மாந்தர்களை
தாவி யெரிந்திடும் நரகம் தன்னில்
தள்ளப்படு மென்றார் நபியிறஸூல்.

(634) அவன்தன் வயிற்றிலுண்டாங் குடல்கள்
ஆகாப் பெருநாற்றமாய் வெளியாம்
கவிழ்ந்த குடலைக் கொண்டவன் சுற்றுவான்
கத்தவஞ் செக்கில் சுற்று மாப்போல்.

(635) எவரும் அவன் பக்கல் வந்து கேட்பார்
இந்த அதாபேது உனக்கெனவே
கவல்வானவ னெந்தன் அறிவின்படி
கருத்தால் நடவாதபடியா லென்பான்.

(636) விலக்காம் செயல்களில் மிகவிலக்காம்
பீவிமார் வெளியிற் போகுதல்
பலக்கேழ் அமைத்தவன் முனிவாகவே
பார்ப்பான் இவைக்கஞ்சி நடந்து கொள்வீர்.

(637) நெருப்பாற் படையுண்டகத் தரியால்
நீழுமுதட்டைக் கத்தரிக்கக் கண்டு
விருப்பமுள ஜிப்ரீலைக் கேட்டேன்
விளம்பினர் சொல்லிச் செய்யாரென்றே.

(638) தந்தைதனைக் கொண்டும் ரூபம் கொண்டும்
சத்தியம் செய்ய வேண்டாமென
அந்தமுள நபி சொன்னாரென்று
அழகான இமாம் முஸ்லிம் சொன்னர்.

(639) ஆதிதனையன்றி ஆணையிட்டால்
ஆகாக் குபிரிணை யாகுமென
நீதி நபி யுரைத்தாரெனவே
நெறியாம் இப்னஉமற் உரைக்கலுற்றார்.

(640) இன்ன கருமம் செய்யாதிருக்கில்
யஹூதி நஸ்ருனியா னெனவே
சொன்னான் அதின்படி செய்திலையேல்
தொகுத்தார் நபியவன் நஸாருவென்றே.

(641) இருவர்க்கிடையிலே காளியாக
எவரையாகிலும் வைக்கப்பட்டால்
கருவியெனும் கத்திதன்னை யன்றி
கழுத்தை யறுக்கப்பட்டவனு மென்றார்.

(642) கண்ட வழக்குகள் கேட்குகின்ற
ஹாக்கிமார் மூவ்வர் உண்டதிலே
நன்றியுள சொற்கம் தனிலொருவர்
நாறுதனில் இருவர் புகுவார்.

(643) பிணக்கன்றி யிருபேர் நரகம்
பேணு மறிவின்றி வழக்குத் தீர்ப்போர்
மணக்கும் அறிவுண்டா யிருக்கையிலே
வடிவாம் செயல்கொண்டு ஹுக்ம்கள் செய்வோர்.

(644) இணக்கமுள சொற்கம் புகுதும் காளி
இல்மின்படியே தான் என வுரைத்தார்
கணக்கு வழக்குகள் தனிற் கைக்கூலி
கருத்தாக வாங்குவது ஹறாமென

(645) இணக்கமுள்ள இப்னுமஸ் ஊதென்போர்
இயம்பினு ரென்றூர் தப்ருனியார்
வணக்கமுள முஃமினுனோர்கள்தான்
வடுவாம் கையிடை வாங்காரென்றூர்.

(646) ராகம்தனைச் சுகமாகக் கேட்கும்
நாயானமாந்தர் பாவம்களை
நாகம் அமைத்தவன் பொருளெனவே
நல்ல முஹம்மது நபி யோதினர்.

(647) கழி கம்படிப்போர்கள் கின்னரங்கள்
கடிந்த் ஹறுமான நாகசின்னம்
தெளிவாய் உகப்பாக கேட்டிருப்போர்
ஷெய்தான் பயலான ஷைதான்களே.

(648) வரிசையுள இமாம் கஜ்ஜாலியார்
வாகா யுரைக்கலுற்றூர் வீணையை
பிரிசமுடன் கேட்க ஹறுமாமென்றும்
பெருத்த பெரும் பாவம் இவையே யென்றூர்.

(649) உகப்பாம் மனிதர் காலங் கூடினல்
உடையோன்களா வென்று பொறுத்தோருக்கு
பகைப்பிலா சொற்கமன்றிக் கூலி
படைத்தோனிடத்திலே யில்லை யென்றூர்.

(650) ஏமப்பதி சொற்கம் எளியபேர்கள்
இம்மைதனில் சீமான் தனக்குமுந்த
ஆமெனு மாண்டஞ்ஞூறுக்குமுன்
அழகாய்ப் புகுதுவாரென்றூர் நபி.

(651) மிஸ்கீனுய் என்னை ஹயாத்தாய் வைத்து
மிஸ்கீனுயென்னை மவ்த்தாக்கு நீ
மிஸ்கீன் கூட்டத்தில் எழுப்பெனவே
விரும்பி நபி யிரப்பாரிறைபால்.

(652) வம்பாம் சரீரத்தை யடக்கியாண்டு
மவ்த்தின் பிறகுண்டாம் கருமத்திற்கு
இன்பமுடன் அமல் செய்வோர்கள்தான்
இம்மைதனில் புத்தியுள்ளோ ரென்றூர்.

(653) சரீரம் தனக் கொற்றுற்போல் நடந்து
தம்பிரான் பக்கல் நாட்டம் வைப்போர்
அரியோனிடத்திலே பாவியென்ன
அருளினு ரெங்கள் ஆலநபி.

(654) பூமி நிரம்பின சீமானிலும்
புவியிலொரு பகீறேற்றமென்று
ஆமினர்மகன் சொன்னுரென்று
ஆன்ஸஹ்று ப்ன் ஸஹ்று சொன்னுர்.

(655) அழகாம் சுவர்க்கத்தை யெட்டிபார்த்தேன்
அதிலுண்டாம் பேர்கள் அடங்கலுமே
யெளிய மிஸ்கீனுய்க் கண்டேனென்ன
ஏந்தல் முஹம்மதுநபி யோதினர்.

(656) உகந்தோருடன் கூடுங்கோளெனவே
உண்மை நபியுள்ளாஹ் சொன்னுரென்ன
பகர்ந்தாரவர் மூஸா எனநவின்றுர்
பாரஇமாம் முஸ்லிம் புகாரி.

(657) சிநேகரெனும் தோழமார்கள் தம்மை
சீராய் உகந்தோரை நாளை ஆதி
அநீதியமென்றி யெழுப்புவானென்
றஹ்மதுநபி அருளிச்செய்தார்.

(658) வேண்டாக் கருமங்கள் தன்னைவிட்டால்
மேலான தீனுக்கழகாமென
தூண்டா விளக்கானநபியிறஸூல்
சொன்னுரெனத் திற்மதீ பேசினர்.

(659) அகமா மெனும்கல்பு திருத்தமானுல்
அங்கமடங்கலும் திருந்துமென
அஹ்மதி றஸூல் சொன்னுரெனவே
அஸ்ஹாபி இக்ரிமா வுரைத்தார்.

(660) தின்மைக் கடுத்தாற்போல் நன்மை செய்தால்
தீங்காக வந்ததின்மை தன்னை
நன்மையழிக்கு மென்றுரைத்தாரென்ன
நலவு மிகவுள்ள மஆது சொன்னுர்.

(661) ஹஸனுத்தெனும் நன்மை செய்துவந்தால்
கருணையனுகாத தின்மை தன்னை
பிசகில்லா தழித்திடுமெனவே
பெருமான்நபி தமக்கிறை யோதினன்.

(662) தந்திரமாக நடக்குமது
தருமாய் நிருவாகப் பாதியென்று
அந்தரமேறி மீண்டவெங்கள்
ஆலநபி சொன்னார் அனைவர்க்கே.

(663) ஆரோடும் உகப்பாயிருக்கல்
அக்லெனும் புத்திபாதி யென்றும்
தீராச்சலிப்புகள் நரைக்கிழடின்
செம்பாதியென்றும் நபியோதினர்.

(664) அஞ்சுவுயிர்வஸ்தைக் கொல்ல ஆமென்
றருளினார்நபி பருந்தும் காகம்
நஞ்சான நாகம் பல்லியினம்
நறுக்கும் எலியிவை அஞ்சாகுமே.

(665) வரிசை முஸ்லிம்கள் தனைத்தங்கடம்
வாகாய் வருத்துவோர் தங்களையும்
கருதியவை தன்னை கண்டபோது
கத்லாமெனச் சொன்னார் உலமாக்களே.

(666) தொழுகை நெகிழ்ந்தோர்கள் நிகாஹு செய்து
தோசமுள ஜினச்செய்தோர் மார்க்கம்
தெளிவாய்ப் பிரிந்தோரைப் பழிசெய்தோரை
சீராய்க்கொலை செய்ய துரிஸ்தா மென்றார்.

(667) எந்தவகையான வஸ்துவையும்
எரியாற் கொலைசெய்ய ஹறாமெனவே
பந்தம்போல் இந்தப் புவியில்வந்த
பாரவுலமாக்கள் பகராநின்றார்.

(668) தேரை தவளைகள் இதுபோலொற்ற
தீங்கில்லா வுயிர்ப் பிராணிகளை
சீராய்கத்ல் செய்ய ஹறாமெனமே
சிறப்பாம் உலமாக்கள் செப்பினரே.

(669) நன்மைப் புதையலாம் ஸதகா தன்னை
நலமாய் மறைப்பது நசல்கள் தன்னை
துன்மையுடன் மறைப்பதுவுமென
சொன்னார் நபி சொன்னம்போலாகவே.

(670) இம்மைக் கருமத்தில் சலிப்பாகவே
எவரும் விடிந்தாரேல் கியாமத்து நாள்
நன்மையுள நாயன் முனிவுபெற்று
நஜீஸாய் விடுவாரென்றாரி றஸூல்.

(671) சீமான் தனக்காகத் தாட்சிசெய்தோர்
செய்யும் அமல்தன்னில் இருபங்குதான்
கோமான் சமூகத்தில் அழியுமென்ன
கூறினா ரெங்கள் நபியிறஸூல்.

(672) முழக்கமெனும் இடிதொனியை கேட்டால்
மேலோன்தனை அஞ்சி போற்றல்செய்து
பழக்கம் பறையாமல் இருங்கோளென்ன
பகர்ந்தார் முஹம்மது நபியிறஸூல்.

(673) இன்னான் உதவியில்லா திருக்கில்
இன்னானெனைக் கொல்வா னென்றுசெப்பல்
மன்னான்தனக் கிணையாகுமென்ன
வள்ளல் முஹம்மது நபியோதினார்.

(674) ஆதிதனைநாடி யிருங்கோளென்றும்
அற்ஹாம் மனுவைச் சேர்ந்திருங் கோளென்றும்
நீதியுள நபிதொகுத்தா ரென்ன
நெறியான அஸ்ஹா புரைத்தார்.

(675) எந்த அமலினும் ஏற்றமான
இனிய அமலே தென்றிஸூல் தம்மை
வந்து ஒருத்தனார் கேட்டபோது
வல்லான் தனக்கீமான் கொள்வதென்றார்.

(676) பிந்தி வரிசையே தென்றபோது
பேசினார் நபி குடல்வாய் தன்னை
அந்தமுடன் பேணிக்கொள்வ தென்ன
அவனிதனி லுள்ளோர் அறிந்துக் கொள்வீர்.

(677) பெந்து மனிதர் பால்நுந்தாள்கொண்டு
விரும்பி நடந்துபின் நலவுநன்றி
அந்தமுடன் செய்யாதிருக்கில் பெந்தை
அவனிதனில் முறித்தோனு மென்றார்.

(678) துனியா தனிலிருப்பதுக் குவமை
சொன்னார் நபியுல்லாஹ் மரத்தின்கீழில்
இனிதாய் நிழலுக்கு இருந்துபின்பு
ஏகும் பரிசுபோலாகு மென்றார்.

(679) கனவுதனில் இன்ப சுகங்கள்கண்டு
களிகூர்ந்து மனம் மிகமகிழ்ந்து
இனிதாய் எழுந்த பின்னொரு வஸ்துவும்
இராதபரிசாகும் துன்யா வென்றார்.

(680) துனியாதனக்கும் ஆகிறம்தனக்கும்
சொன்னார் நபியுவமை விரலை
முனிவாம் கடல்நீர்க்குள் புகுத்துப்பின்பு
மோசமற எடுக்கும் போலென்றார்.

(681) ஓர் நன்மைசெய்தா லதனைபத்தாய்
உடையோன் எழுதுவான் ஒருதீங்கினை
பாரப் புவியிற்செய்தா லொன்றாக
படைத்தோனெழுதுவானென நவின்றார்.

(682) என்னைக் காணாமல் எனக்கு ஈமான்
இனிதாகக் கொண்ட பேர்களுக்கு
முன்னத் தாய்துஆ வுண்டெனவே
மூன்றுமுறை சொன்னார் நபியிறஸூல்.

(683) கோலம் பெறகத்னச் செய்குதல்
குளிர்ந்த நறை பல்தேய்ப்பு நிகாஹூம்
நாலு மிவை றஸூல்மாருடைய
நலமான சுன்னத்தாகு மென்றார்.

(684) பாவம் தனைவிட்டு தவ்பாச் செய்தால்
படைத்தோன் கபூலாக்கு வானெனவும்
சாவில்லான் பக்கல்துஆ விரந்தால்
தகுமாம் பிஷாரத்துச் செய்வானென்றார்.

(685) சொறியும் கதிரானகில் குப்பாயம்
தொல்லை மிகுந்திடும் கியாமத்து நாள்
செறிவாய் குரல்விட்டு ஒப்பாரிகள்
செப்புவோரு டுப்பார் களென்றார்.

(686) ஒப்பாரி சொல்லி அழுவோர் இந்த
உரத்த சொறிச் சட்டைதனை யுடுத்தால்
வெப்பமுடன் சொறிவார் களென்பு
மேனி தசை நீங்கி வெளியா மட்டும்.

(687) துனியா தனிலுள்ள சொறிச் சலுக்காய்
துயில் நித்திரையன்றி யிரவு பகல்
கனமாய்ச் சொறிவார் களெந்தப்படி
கடிந்த அதாபுக்குப் பொறுக்கப் போறீர்?

(688) அன்ன மளியுங்கோ ஸலாம் சொல்லுங்கோ
அற்ஹாம் மனுவைச் சேர்ந்திருங்கோ ரவ்வில்
மன்னன் தனைத் தொழுங்கோ சுவர்க்கம்
வாகு பெறப் புகுவீர் களென்றார்.

(689) சொற்கப்பதி தன்னை நினையுமென்று
தொல்லை நரகத்தை மறவாமலே
ஹக்காய் நினையுங்கோ ளெனவுரைத்தார்
களிப்பாய் சிரித்தோர்கள் தங்களுடன்.

(690) துனியா சுகந்தனைவிட்டு நீங்கி
துணியாம் கலையாடை யுடுத்திருக்க
இனிய யகீன் ஈமான் தனிலாமென்ன
ஏற்ற அபூஉமாமத் துரைத்தார்.

(691) பசியாலிரு ஓநாய் கிளையாட்டிலே
பாங்காய் அழிக்கின்ற பரிசதிலும்
குஷியாய் முதல் தேடல் தலைமை தேடல்
குன்றாப் பெரும் தீனைக் கெடுக்கு மென்றார்.

(692) ஆதி திக்றன்றி மிகுதி பேசல்
அகமா மெனும் கல்பை அழிக்கு மென்று
ஓதினர் நபியென வுரைத்தார்
உண்மையுள இப்ன் உமறெம்பவர்.

(693) கலாமாம் உரையெல்லாம் கேடாய் விழும்
கனதியுள நன்மை தின்மைகளை
பெலமாக எவல் விலகலன்றி
பெரியோன் நினைவன்றியென நவின்றார்.

(694) பேசா திருப்பதும் தனிக்கு மதும்
பெரியோன் தனை அஞ்சி பாவத்தின்மேல்
மோசமறக் கறைந்த ழுகிறதும்
மொழிந்தார் இது ஸுன்னத்தாகுமென்றே.

(695) படையால் இறந்தோரை உலமாக்களை
பதியிலுள சீமான் தங்களையும்
கடுகக் கொடுவந்து முதற் கேள்வியாய்
கத்தா கடினமாய் கேட்பா னென்றார்.

(696) பீஸபீல் தளில் பட்டோருடன்
பெரியோ னுரைப்பானுன் அமல் ஏதென்றே
பேசுவான் பட்டேன் உனக்கே யென்றே
பேரியோன் உரைப்பான் பொய் பகர்ந்தா யென்றே.

(697) வாசமுள நல்ல தீரனென்று
மனிதருரைத் திடப் பட்டா யென
தோஜ கெனும் தீயில் முகங்கவிழ
துய் யோன் விடுவா னென்று ரிறஸூல்.

(698) இல்லைமைப் படித்தவன் தன்னுடனே
இயம்புவான் ஆகி யேது அமல்
கல்வி தனைக் கொண்டு செய்தா யென்றால்
கவல்வான் அவன் இதின்படி நடந்து.

(699) சொல்லி அறிவித்தேன் மனுவுக் கென்பான்
துய் யோன் திருவுள மாவான் அப்போ
பொல்லாப் பெரும் பொய்யை நீ பகர்ந்தாய்
புவி யோருனை ஆலி மென்று செப்ப.

(700) கல்லை யறப் படித்தா யெனவே
கடிந்த கோபமாய் முனிந்த வனை
தொல்லை நரகத்தில் விடுவா னென்றார்
தோகை மயிலான நபி யிறஸூல்.

(701) மிகுந்த முதலாளி தன்னுடனே
மேலோ னுரைத்திடு வானுனக்கு
பகிர்ந்த வுடைமை யாலேது அமல்
பரிவாகச் செய்தா யென்று கேட்டால்.

(702) தகுதியுட னுனக்காய்க் கொடுத்து
சங்கை யுடனேற்க நடந்தே னென்பான்
அகிதம் பறைந்தாய் நீ யென்றுரைத்து
அழலாம் நரகத்தில் விடுவா னென்றார்.

(703) அல்லாஹ் தனக்கும் ஆகிறந் தனக்கும்
அழகாக ஈமான் கொண்ட பேர்கள்
நல்ல வுரை யன்றி தீங்கை விட்டு
நாக்கைப் பிடியுங் கோவென நவின்றார்.

(704) விளங்கா வுரை பேசினோர் நரகில்
விழுந்து சுரிபோ வாரைந் நூறுண்டென்
றழகாம் நபி சொன்னா ரெனவுரைத்தார்
அண்ணல் அபூஹுறைறா வென்பவர்.

(705) அழியாவுடை மையும் புதையல் களும்
அழகாய் கனுஅத்து செய்குதலென்
றிழியாவுரை பேசும் நபியிறஸூல்
ஏற்ற முளயார் கட்குரைத் தனரே.

(706) அன்றோடோ ஜீவனம் தன்னைக் கொண்டு
அழகாயது கொண்டுபோது மாக்கி
நன்றாய் இஸ்லாமாயிருந் தோர்கள் தான்
நலவுமிகப் பெற்றாரென நவின்றார்.

(707) வண்மை நெறியுள முஃமினானோர்
வடுவான பேச்சு சொல்லா ரென்னி
உண்மை நபி சொன்னாரென வுரைத்தார்
ஓசையுள இப்னுஸிரா ஜென்பவர்.

(708) அல்லாஹ் தனக்கும் ஆகிறம் தனக்கும்
அழகான ஈமான் கொண்டோர்கள் தான்
பொல்லா இழிவான பொய்யுரைகள்
புகலா ரெனச் சொன்னார் புர்கான் நபி.

(709) நம்ப லெனும் நாட்டம் வைத்தோர்கள் தான்
நல்ல ஹவாவலை முறித்து விட்டால்
தம்பிரான் அவன் ஆதரவை
தருமாம் கியாமத்தில் முறிப்பானென்றார்.

(710) ஹக்குதனைத் தட்டி மனிதர் தம்மை
கண்ணாற் சிறுகக் கண்டிருக்குமது
சக்கென் றியிது பெருமை யென்று
சங்கை நபியுல்லாஹ் சாற்றினரே.

(711) கம்பளி ஆடையுடுப் போர்களும்
கையாளுடன் அன்னம் புசிப்போர்களும்
சிம்பற் குணமான பெருமைத்தனம்
சிந்தைதனிலில்லாப் பேர்களென்றார்.

(712) பெருமைத் தனமுண்டாய் கோபமுண்டாய்
பிரியா திருப்போர்கள் பெரும் வம்பராய்
நரகரி வராகுமென நவின்றார்
நல்ல முஹம்மது நபியிறசூல்.

(713) தேனின் குளவியை யெறும்பினத்தை
தீங்காய்க் கொலைசெய்ய வேண்டாமென
தீனில் மனிதரை வரவழைக்கும்
சீமான் முஹம்மது நபியோதினார்.

(714) வானேறும் ர்ரவில் உம்பரெல்லாம்
வாகாயுரைக்க லுற்றாரென்னுடன்
ஜீனத்துள வுமதும்மத்தோடு
செப்பம் ஹிஜாமத்துச் செப்புமென்றே.

(715) காலம்பெறத் தேனை மூன்றுமுறை
கருதி யொருமாதம் நக்கிவந்தால்
தாலம் தனிலுள்ள முஸிபத்துகள்
தாண்டியவன் வழிவரா தென்றார்.

(716) தாயைத் தகப்பனை கிருபைக்கண்ணால்
சந்தோஷமாக பார்க்குமது
நாயன் சமுகத்தில் கபூலாம் ஹஜ்ஜின்
நன்மைக்கெதிரா மென்றாரிறஸூல்.

(717) தகப்பன் பிரிசமாய் பிள்ளை தன்னை
சந்தோஷமாக நோக்கல் செய்தால்
உகப்பான பிள்ளைக்குண்டா மொரு
உரிமைப்பலன் போலென்றுரிறஸூல்

(718) அப்போ துரைத்தார்கள் நபியுடனே
அழகாய்த் திலுநூறு பத்தின்முறை
செப்பமுடன் பார்த்தாலிது வரிசை
சேருமோ வென்றார் சேருமென்றார்.

(719) உந்தன்தாய்தந்தையுனை பேவினால்
உடைமைதனை விட்டும் புறத்திப்பட
அந்தமுடன் அந்தப்படி வேணுமென்
றழகாம் நபிசொன்னார் வஸிய்யத்தாக.

(720) தந்தை தனக்கும் அன்னை தனக்கும்
தருமாய்ப்படி யன்னம் அளிக்கவென்று
அந்தமுடன் தொழில் செய்தாலது
அழகாம் பீஸபீல்கெதிரா மென்றார்.

(721) அன்பாய் தகப்பனை பார்க்குமதும்
அழகாம் முஸஹபைதாள் பார்க்குமதும்
இன்பமுள இபாதத்தாகு மென்ன
இப்னுமஸ்ஊது இயம்பலுற்றார்.

(722) பெரும்பாவம் செய்தேன் அடியேனுக்கு
பெருமானே தவ்பாவுண்டோ வென்ன
விரும்பி நபிபக்கல் கேட்டபோது
மேலாம் தாய் தந்தையுண்டோ வென்றார்.

(723) அப்போதவனில்லை யென செப்பினன்
அழகாம்நபி சொன்னார் அகலவுண்டோ
செப்பினன் அவன் ஒமெனவே
சீராகநன்றி செய்வா யென்றார்.

(724) தாயும் தகப்பனும் இஸ்லாமுமாய்
தருமாயவர்கட்கு நன்றிசெய்தால்
நாயன் அவனுக்கு சுவர்க்கவாசல்
நலமாய்த் துறப்பானென்று ரிறஸூல்.

(725) கோபம் வருத்தினல் அவர்கள் தம்மை
கோமான் முனிவவர்க்குண்டா மென்ன
லாபம் மிகவுள்ள இப்னு அப்பாஸ்
நலமாய் நபிசொன்னரென நவின்றார்.

(726) வயசாம் தகப்பனேத் தாயை யெற்றி
வன்னிநரகத்தில் புகுந்தோர்கள்தான்
கைறில்லா ஹலாக்கானு ரென்று
காவல் முஹம்மது நபியோதினா.

(727) தாய்க்குமிக நன்றி செய்திருக்கும்
சங்கையுள மகன் காரியத்தை
வாய்க்கு சுகமான வஸ்தருந்தும்
வரிசை சுவர்க்கத்திற் கண்டேனென்றார்.

(728) இஷாவாம் தொழுகையிலானபோது
எந்தன் தாய்தந்தையெனே விளித்தால்
விசார மறலப்பைக் என ஏனென்று
விரும்பி மறுமொழி சொல்வே னென்றார்.

(729) வரிசையுள சுறைஹென்பவர்தான்
வண்மையுள ஆலிமாயிருந்தார்
பிரிசமுள தாயார் தமக்குத்தாரம்
பேணித் தொழுகை விட்டுரையாத்ததால்

(730) நெரிசல் மிக்வாக பளீஹத்தானர்
நிலத்தில் அறிந்து தாய்தந்தைசொல்லே
உருசையுடன் கேட்டு நடந்துகொண்டால்
உடையோன் திருவுளம் உண்டாமென்றார்.

(731) வண்மையுள தாயார் உனேவிளித்தால்
வரிசைத் தொழுகை விட்டுரைப்பாயென்றும்
உண்மை தகப்பனுக்குரையா யென்றும்
உறுதியுள மக்ஹூலு துரைத்தார்.

(732) மனது வெறுப்பாக தாய் தகப்பன்
மண்ணிலொடுங்கினுற் பிள்ளையர்கள்
கனமாய்து ஆச்செய்தால் நல்லாரென்று
கத்தா எழுதுவானென நவின்றார்.

(733) அவர்கன் கப்றதனைவெள்ளிதோறும்
அழகாய் ஜியாறத்துச் செய்திருந்தால்
மவ்லா இவன் பிழை பொறுத்திவனை
பர்றென்றெழுதுவானென நவின்றார்.

(734) நீளித்த எண்ணம் அல்புதன்னில்
நீரில்லா நடார்ந்திருக்குமது
தூளித்த சிங்காசனமெனவே
துய்யநபி யுல்லாஹ் தொகுத்துரைத்தார்.

(735) மஸ்ஜிதெனும் பள்ளிதனிலொருவர்
வண்மையுடன் கட்டிகாத்திருக்க
குஷியாய் விழியினாற் கண்டீராகில்
கூறுங்கோ சாட்சிமுஃமீனென்றே.

(736) வீடுதனில் உலூச் செய்துகொண்டு
விரும்பி மஸ்ஜிதில் தவம் தனக்கு
நாடில் தக்வாவாய் ஹஜ்ஜு செய்வோர்
நல்ல பலன் போலுண்டாகு மென்றார்.

(737) சிறப்பானோர் சொர்க்க வாசிகளில்
தீனில் உலகமாக்களாகுமென்ன
வெறுப்பாம் குணமில்லா நபியிறஸூல்
விருப்பமுள யாரோ டுரைக்கலுற்றார்.

(738) வரிசை ஜமாஅத்தை நெகிழ்ந்திராதே
வல்லோன் றஹ்மத்து ஜமாஅத்திலென்
றரியோன் நபியுல்லாஹ் உரைத்தாரென்ன
அழகான யார்கள் அருளிச் செய்தார்.

(739) உங்கள் பிதாவுக்கும் அன்னையர்க்கும்
உறுதியுடன் நன்றி நீங்கள் செய்தால்
சங்கையுடன் உங்கள் பிள்ளைகளும்
தருமாக நன்றி செய்யுமென்றார்.

(740) மனிதர் திரியை நாடாமல் நீங்கள்
வண்மையுடன் பேணி யிருந்தாலுங்கள்
கனியாம் திரிகளும் துப்புரவாய்க்
காவலா யிருப்பார்க ளென்றார்.

(741) அன்னை பிதா விடையன்றி யொரு
ஆணாய்ப் பிறந்தவன் பீஸபீல்க் கென்
றுன்னி மனம்வைத்து வந்தபோது
உத்தார மென்றிவாரா யென்றூர்.

(742) அன்னைக்கிருபங்கு நன்றியென்னும்
அழகாம் பிதாவுக்கோர் பங்குண்டென்றும்
மன்னரெனும் ஹஸன் சொன்னு ரென்ன
வரிசையூனுஸூ பேசிவந்தார்

(743) இணைக்குப் பிறகொரு பெரும் பாவங்கள்
இல்லை அவன்நீரை ஹறும்பர்ஜில்
அணுகியிருக்கும் போலென வுரைத்தார்
அண்ணல் முஹம்மது நபியிறஸூல்.

(744) கொடிய பெரும் பாவமான ஜினு
குறிகேடனுகியே செய்பவர்க்கு
மிடிமைத்தனத்தை யுண்டாக்குமென்ன
மேலாம்பரமான நபியோதினுர்.

(745) வல்ல ஒரு ஊரில் ஜினுச் செயல்கள்
வாகாய் வெளிப்பட நடக்குமானுல்
தொல்லை மிகவுள்ள பஞ்சம் கொண்டு
துய்யோன் பிடிப்பா னென்றூரிறஸூல்.

(746) எனக்குப் பிறகெந்தன் உம்மத்துக்கு
இல்லை பித்னுக்கள் பெண்போலென்ன
மனக்கண் தலைக்கண்போல தெரியுமெங்கள்
வள்ளல் முஹம்மது நபியோதினுர்.

(747) பறப்பாம் வகையினம் ஊர்வினங்கள்
படைத்தோன்தனை தஸ்பீஹு செய்யும்
மறப்பா யிருந்தாக்கல் ஹலாக்காமென்ன
மன்னர் முஹம்மது நபியோதினுர்.

(748) காலம்பெற பக்ஷி கூப்பிடுதல்
கத்தாதனைப் போற்றி இரணம் தேடி
கோலம் பெறக் கூவுமென வுரைத்தார்
கோஜா முஹம்மது நபியிறஸூல்.

(749) கலிமா ஷஹாதத்து சொலிமரித்தால்
கப்ரில் வெருட்சியும் மறுமைதனில்
அலமாம் வருத்தமும் இல்லையென
அருளினு ரெங்கள் ஆலநபி.

(750) கஹ்றபெனும் ஸூரத் பரக்கத்தினில்
கருதித் தரித்தாக்கால் பத்தாயத்து
பகையனெனும் தஜ்ஜால் தீங்கில் நின்றும்
படைத் தோனிவன் தன்னைக் காப்பானென்றார்.

(751) ஓடுக்கத்தினில் பத்துபாட மிட்டால்
உந்தும் கியாமத்து நாளதிலே
நடப்பாம் ஒளிவாக நிற்குமென்ன
நல்ல முஹம்மது நபியோதினர்.

(752) வெள்ளிக் கிழமையில் ஓதி வந்தால்
மேலான வெள்ளி வருமளவும்
தள்ளி வரும்பலாய் தன்னை விட்டு
தக்கோனிவன் தன்னைக் காப்பானென்றார்.

(753) வல்ல ஒரு கூட்டம் தனிலொருத்தன்
வல்லான் தனை அஞ்சி அழுதாலவன்
நல்ல பொருட்டினுல் அவர்கள் தம்மை
நரகம் தனைவிட்டுக் காப்பானென்றார்.

(754) ஆஷூரு நோன்பு பிடித்தாலந்த
ஆண்டுதனிற் போன நோன்புக் கெல்லாம்
வாசமுடன் போது மெனவுரைத்தார்
வள்ளல் முஹம்மது நபியிறஸூல்.

(755) வங்கிசம் எல்லாம் அழிந்து போகும்
மறுமைதனில் எந்தன் வங்கிசம்கள்
சங்கையுடன் முறியா தெனவே
தம்பிரான் நபி சாற்றினரே.

(756) மூன்றுபேர் சாட்சி யிருவர்சாட்சி
முனிவாம் ஜினுவுக்கு கூட்டல்லவென்
றுண்டபெரியோனும் அவன் தூதரும்
அழகாய் கபூலாக்கா ளென்றுரைத்தார்.

(757) மூவர் இருவர் தான்ஜினுவின் சாட்சி
மொழிந்தாலவர்களை யெண்பதடி
தாவியடித்துப்பின் இவர்கள் சாட்சி
தருமாயொருக்காலும் கூடாதென்றார்.

(758) இந்தப்படி சாட்சி சொன்னோர்கள்தான்
ஈனமுளபாஸிகாகு மென்றும்
அந்தமுள ஆதிவேதம் தன்னில்
ஆலநபி தமக்கருளிச் செய்தான்.

(759 ஹத்தில்லா ஹறுமானவையை
கருதி யொருதன் செய்தாலவனை
ஹத்திலொரு வகை ஏற்றிடாமல்
கருதியடித்திட ஆகுமென்றார்.

(760) புருஷன் தனக்கில்லா பிள்ளைதன்னை
பெற்றேன் புருஷனுக்கென் றுரைத்தோர்
கருதும்பதி சொர்க்கம் புகுதாரென்ன
காவல் நபியுல்லாஹ் கவலலுற்றார்.

(761) ஆலிம் முகம்தன்னை நோக்குவது
ஆழகாமொரு ஆண்டின் வணக்கத்திலும்
கோலம் பெற என்பாலுகப்பெனவே
கூறினரெங்கள் நபியிறஸுல்.

(762) தனித்தோருடன் ஷெயித்தா னென்பவன்
தண்மையுடன் அணைந்திருப்பா னென்றும்
இனத்தாவிருவர் உண்டாயிருந்தால்
ஏகி அகலுவானென வுரைத்தார்.

(763) வீடுதனில் இருப்பாயெனவும்
வினையான நாவை ஆள்வாயென்றும்
கேடான தீங்கை விடுவாயென்றும்
கீர்த்தியுள நன்மை யெடுப்பாயென்றும்

(764) நாடு உறும்பேர்கள் கருமமென்றும்
நாஸான மற்றோர் கருமங்களை
சோடுவிடு என்றும் நபியிறஸுல்
சொன்னாரெனக் கென்றார் அம்றுஆஸீ.

(765) எந்தன் உம்மத்தில் தவசித்தனம்
இனிதாய் மஜ்லிஸில் இருப்பதென்றும்
அந்தரங் கடந்தறுஷில் சென்று
ஆதியுடன் பேசும் நபியுரைத்தார்.

(766) விறகுதனை அனல் தின்னுமாப்போல்
வினையாம் கெடும்பு நன்மை நலவை
குறிகேடணுகியே தின்னுமென
கோமான் முஹம்மது நபி கூறினர்.

(767) ஆகாஹஸதினல் உலமாக்கள் தான்
அழல்வாய் நரகத்திற்புகுவா ரென்ன
சாகான்வஹீகொண்டு ஜிப்ரீல் வரும்
சங்கை முஹம்மது நபியோதினர்.

(768) ஹலாலாம் ஒஜீவனம் தானருந்த
கருத்தாய் வருமென்றும் ஹறாமிரணம்
பாலாயாய்க் கணக்கன்றி வருமெனவும்
வாழ்த்தின ரெங்கள் நபியிறஸூல்.

(769) நிரம்பப் புசிப்பது நசலுக்கெல்லாம்
நேரான அடிமூடெனவும்
விரும்பி பட்டினி மருந்துக்கெல்லாம்
மேலாம் தவாவென்று விளம்பலுற்றார்.

(770) அஞ்சுகாரியம் தனில் தீவிரம்
ஆகவெனச் சொன்னர் ஆலநபி
கொஞ்சு கிளியாள பெண்பிள்ளையை
குணமாய்க் கலியாணம் செய்திடவும்.

(771) துஞ்சி யிறந்தோரை நல்லடக்கம்
சூழ்ந்த கடன்தீர்த்தல் தொழுகை தன்னை
அஞ்சிபயந் தொகுத்துடனே தொழல்
அழகாய் விருந்தளிப்பதுவு மென்றார்.

(772) தீவிரம் ஷைத்தான் பாலென்றும்
சிறப்பாம் தாமதம் இறைபாலென்றும்
தீபகுணமான நபியிறஸூல்
செப்பினர் சிறப்பானேருடன்.

(773) செத்தோர்தனை கபன் செய்தோருக்கு
ஸூந்து ஸூவெனும்பட்டை நாளை
பற்றறு வாழ்க்கைப் பதிதனிலே
படைத்தோ னுடுத்துவானெனப் பகர்ந்தார்.

(774) சொர்க்கப் புதையலாம் லாஹவ்ல
துய்யகலிமா வென்றிறஸூல் நபி
ஹக்காக சொன்ன ரெனவுரைத்தார்
கருணையுள அபுத்தர் தாவென்வோர்.

(775) மரத்தின் இலை யுதிர்ந்தாற்போலவே
வம்பாம் பிழையெல்லாம் உதிர்ந்துவிழும்
கருத்தா ஸுப்ஹானல்லாஹி என்று
கனமா யுரைத்தாலென் ருணையிட்டார்.

(776) புவிலுள வாழ்வு அடங்கலிலும்
போற்றலுள வாழ்வு கலிமாதன் ஜீஹு
தவனமுட னென்பா லுகப்பெனவே.
சங்கை நபியுல்லா சாற்றினரே.

(777) வரிசைக் கலிமாவை ஓர் மலக்கு
வாகாய்ச் சிறகேந்தி வைத்துப்பின்பு
பிரிசமுடன் பறந்திறைபால் வைத்து
பிரிவாரெனச் சொன்னர் பெருமாள் நபி.

(778) வண்மைக் கலிமாதன் ஜீஹுதன்னை
வாகாயுரைத்தா்ல்தொண் ணூறு நன்மை
உண்மையுடன் உண்டாம் பாவம் தொண்ணூற்
உடனே கழறுமென் றுரைத்தார் நபி.

(779) ஆதம்மகன் தன்னில் ஷைத்தானுக்கு
ஆகா இரங்க லுண்டாகுமென்றும்
நீதமுள மலக்கு ம்பருக்கு
நெறியாய் விடுதியுண்டாகு மென்றார்.

(780) நன்மை நினைவெல்லாம் மலக்காலென்றும்
நலவில்லாத் தீங்குநினை வெண்ணங்கள்
தின்மை ஷைத்தானு லுண்டாமென்றும்
சிந்தை மனதினுல் அறிவீர்களே.

(781) குறிகேடுள ஹால்கள் செய்யாமலே
குடும்பம் தனக்காக அயலுக்கிய
திறமாய்ஹலால் ஒஜீவனம் தேடுவோர்
திங்கள்போல் நாளை வருவாரென்ருர்.

(782) கண்ட ஒஜீவனம்தனில் மோகமாய்
கருதியருந்தாமல் பத்தியமாய்
வென்றியுடன் நன்ருய் தவிழ்ந்திருங்கள்
விரும்பும்தவா வெல்லாம் அதிலாமென்ருர்.

(783) மனிதர் தனில் மிக பெலத்தவனய்
வாகாயிருக்கச் சந்தோசமானோர்
மனதுவுரைப்பாக இறைமேல்பரம்
வண்மையுடன் சாட்டியிருப்பாரென்ருர்.

(784) படைப்பாம் மனிதனுய்ச் சங்கைமானுய்
பாங்காயிருக்கச் சந்தோசமானோர்
படைத்த நாயனை உள்ளச்சமாய்
பாவம் தனைவிட்டு இருப்பாரென்ருர்.

(785) ஏதெல்லாம் பெரும்பாவ மென்று
இனிய நபிதம்மை கேட்ட போது
ஆதித னக்கிணை வைக்குமதும்
அன்னைபிதா மனம் முறிக்குமதும்

(786) நீதமணுகாதகொலை செய்வதும்
நெறிகேடனுகிய பொய்ச்சத்தியம்
ஓதியுரைப்பதும் பெரும்பாவமென்
றுண்மைநபியுல்லா உரைக்கலுற்ருர்.

(787) வந்தமனிதர்க்கு விருந்தளிக்க
வண்மையுடன் வேணுமென ஜிப்ரீல்
அந்தமுடன் சொன்னு ரென வுரைத்தார்
அஸ்ஹாபி மார்க்கு ஆலநபி.

(788) எழுபத்துமூன்று மில்லத்தாக
எந்தன் உம்மத்தோர் பிரிந்திருப்பார்
தெளிவாயதி லொருமில்லத்தன்றி
சேரவிழுவார்கள் தீயிலென்ருர்.

(789) ஏற்றமுள்ள ஒருமில்லத்தே தென்
றினியநபி தம்மைக்கேட்ட போது
மாற்ற மணுகாமல் நாமிருக்கும்
வண்மையுளமில்லத் தாகுமென்றார்.

(790) நான் சொன்ன ஹதீதானவையை
நலமாய் மனிதர்க்குப் பேசுங்கோளென்
றீஞ்சின் குலதனை அழைத்து மீள
ஏற்றமுடன் ஓட்டிவித்தோர் சொன்னார்.

(791) தந்தன் இஷாறத்தால் குறுன்பொருளை
சாற்றியுரைத்தோர்கள் பிழைசெய்தாரென்
றிந்தப் புவிதனில் இந்தழைத்த
ஏந்தல் முஹம்மது நபியோதினார்.

(792) அறிந்த மஃனவை உரைத்திடுங்கோ
அறியாப் பொருள் தன்னை ஆதிபக்கல்
திறமாகச் சாட்டிவிடுங்கோ ளென்று
திருவாய் மலர்ந்தால நபியோதினார்.

(793) அறிந்தோரிடம் தனில் கேட்குமது
ஆகாமோட்டின் பால் சுவாத்தியமென்
றுறும்தாயக நபியுரைத்தாரென
உண்மையுள ஜாபிர் உரைக்கலுற்றார்.

(794) தன்கையிலுண்டாம் பொருள்தனிலும்
தம்பிரான்பாலுண்டானவையை
அன்பாய் மிகவிசுவாசமானோர்
அவனிதனிற் சீமானாகுமென்றார்.

(795) பட்சியினம் போலே பரம்சாட்டினால்
படைத்தோனளவிலே நுங்களுக்கு
பட்சமாய் ஆதியிரணங்களைப்
பாங்காய் தருவா னென்றாரிறஸூல்.

(796) கற்பிக்கப்பட்ட ரிஜ்கானவை
கடுகவரும் உன்பால் கற்பியாது
தப்பி அகன்றுபோ மெனவுரைத்தார்
சங்கை முஹம்மது நபியிறஸூல்.

(797) படுவான் தனிலொரு கடுகுமணி
பாங்காயுனக்கென்று விதித்தாலிறை
கடுகவருமந்தகடு கெனவே
கல்பாலறிந்தீமான் கொள்ளுவாயே.

(798) இரக்கமுளதாய் தன் பிள்ளைகட்கு
இரங்கும் பரிசுபோல் இறைபயல்க்கு
உருக்கமிகவுண்டா யிருப்பானென
உண்மைநபி யுல்லா உரைக்கலுற்றார்.

(799) வல்ல ஒருவனை இறை யுவந்தால்
வருத்தமுள பலாய் தன்னைக்கொண்டு
தொல்லைப் படுத்துவா னெனஉரைத்தார்
துய்ய முஹம்மது நபியிறஸூல்.

(800) பலாயால் மிகுந்தோர்கள் அன்பியாக்கள்
வண்மை ஷுஹதாக்கள் அவ்லியாக்கள்
நலமாய் நடக்கும் நல்லார்களென்று
நயினார் முஹம்மது நபிகூறினார்.

(801) முகத்திற்காய்ச் செய்வோர் தங்களுக்கும்
மோசமுள பகீலானவர்க்கும்
சுகத்திற்காய்ப் படையுண்ட சொர்க்கம்
துய்யோனிடத்திலே ஹறுமா மென்றார்.

(802) தகப்பன்தனிலுந் தாயவர்களிலும்
சங்கைக் குடும்பமா யுள்ளோரிலும்
உகப்புத்தான்மெத்த என்மேல் வையார்
உண்மை யகீன் கொண்டா ரல்லவென்றார்

(803) இஷ்றாக்கெனு மிணைதனைப் பயந்து
இனிய தொழுகையு மிறுத்துப்பின்பு
குஷியாம் ஜகாத்திட்டு றமழானிலுங்
குணமாய் நோன்புவைத்திருந்தால் சொர்க்கம்

(804) பிசகின்றிப் புகுவாரெனவே
பெருமான் முஹம்மது நபியிறஸூல்
நஸீஹத்துரையாக உரைத்தாரென
நல்ல அபூஹுறைறா உரைத்தார்.

(805) கண்ணுற் குறையக்காணுந் தோஷத்தை
கல்பாற் பயந்தஞ்சி யிருங்கோளென்ன
மண்ணுற் படையுண்டோ ரடங்கலுக்கும்
மன்னாகவந்த நபியோதினார்.

(806) மனிதர்தனை நாடிச்செய்யும் அமல்
வண்மை யணுகாத சிறு இணையென்
றினிய ஹதீதுரை செப்புகின்ற
ஏந்தல் முஹம்மது நபியோதினார்.

(807) முஸ்லிம் ஜனாஸாவைப் பின்தொடர்ந்து
முடுகித் தொழுவித்து அடக்குமட்டும்
குஷியா யிருந்தோர்க்கு இரு [1] கீரூத்து
குன்றும் உஹ்துபோ லுண்டாமென்றார்.

(808) நாலுபே ரஞ்சுபே ரொருவர்
நலமா யொருதனை நல்லாரென்று
தாலந்தனில் சாள்ச்சி மவ்தானபின்
சங்கையுடன் சொன்ன லவனையாதி

(809) மேலாங் கியாமத்தில் சுவர்க்க பதி
விரும்பிப் புகுதுவிப்பானே னவே
ஆலநபி சொன்னா ரென மகனை
அத்லான ஹத்தால் வதைத்தோர் சொன்னார்.

(810) செத்தால் வயிற்றி னோக்காடு கொண்டு
தீங்கு விதனங்க ளவன் கப்றில்
வெற்றி பெறஇல்லை யென உரைத்தார்
வேத முஹம்மது நபி யிறஸூல்.

(811) செத்தோர் ஜனாஸாவைக் கண்டீர்களேல்
தீவிரமாக எழுங்கோ ளென்று
முத்தால் படையுண்ட நபியிறஸூல்
மொழிந்தார் கனிவாயால் தெளிவாகவே.

(712) மதுரமுள ஒரு பிடியன்னங்கள்
வரிசை உடப்பான முஸ்லிம்கட்கு
குஷியாய்க் கொடுத்தாக்கா னயனனை
கொடிய கசப்பெல்லாம் தீர்ப்பானென்றார்.

---

[1] கீரூத.

(813) கருத்தாக ஹஜ்ஜு உம்ருச் செய்தால்
கழற்று முடிப்பாவந் தனைத்துருத்தி
உரத்த இரும்பி லுண்டாங் கறையை
ஒட்டிக் கழற்றும் போலாகுமென்றார்.

(814) மக்கம் தனி லுள்ள பள்ளி தனில்
வாகா யிருறக் ஆத்தி றுத்தால்
மிக்க மஸ்ஜிதில் தூறு யிரம்
விரும்பித் தொழுவதி லேற்றமென்றார்.

(815) பெண்சாதி தன்னைப் பேணிக் காத்துப்
பிரியாதவன்மேல் நல்லுறவாடென்று
உண்மை நபியுல்லா(ஹ்)அலிதமக்கு
உரைத்தார் நஸீஹத்தாய் உகப்பாகவே.

(816) எந்த துஆ ஆதிபால் கபூலாய்
ஏறுமெனக் கேட்டபோது நபி
அந்தமுள இல்லாள் துஆ வெனவே
அருளினா ரெங்கள் ஆலநபி.

(817) எந்தன் ஸுன்னத்தை ஹயாத்தாக்கினோர்
என்னை ஹயாத்தாக்கி னோர்களென்று
அந்த முடனென்னை ஹயாத்தாக்கினோர்
அவரென்னுடன் விஸ்திலானோரென்றார்.

(818) மிடிமைத்தனத்திற்கு ஸப்று செய்து
மேதிணி தனிலிருந்தோர்கள் தான்
குடியாய் சுவர்க்கத்தி லென்னுடனே
கூடி இருப்பா ரென்று ரிறஸூல்.

(819) ஸீனந்தனிற் சென்று நல்லறிவு
தேடுங்கோ ளென்று சீமானபி
ஸீனத்தாய்ச் சொன்னாரென உரைத்தார்
சிறப்பா ன அனஸிப்னுமாலிக்.

(820) நஸீஹத் தெனும் புத்திபூமிதனில்
நலமாகச் சொல்லி நடக்கின்றோர்கள்
குஷியா மடியாரென் றுரைத்தாரென்ன
ஹுதைபா றழியல்லாஹ் அன்ஹு சொன்னார்.

(821) உண்மை நபிதமை யொருவர் கேட்டார்
உடையோன் கருணையும் மனுஉகப்பும்
வண்மை யுடனெந்த அமலைக்கொண்டு
வாகாய்ப் பெறலாமென் றுரைத்தளவில்

(822) தண்மை துன்யாவின் ஆசைவிட்டால்
தம்பிரா னுகப்புண்டா மென்றும்
மண்ணில் மனுவை நாடா திருந்தால்
மனிதர் உகப்புமுண்டாகு மென்றார்.

(823) ஹஜ்ஜுப் பெருநாளில் குற்பான் செய்தால்
ஹஸனுதெனும் நன்மை முடியளவும்
மிச்சமுற உண்டாமென உரைத்தார்
மேலான யார்கள் தங்களுடன்.

(824) ஏதாகிலும் நபி பக்கல் வந்தால்
எங்காலிது வென்று வினவியபின்
நீதமுள ஹலா லாயி ருந்தால்
நெறியா யருந்து வார்நபி யிறஸூல்.

(825) துப்புரவான ஹலால்கள் தின்று
துய்ய அமல்செய்யுங் கோளெனவே
மெய்ப்பாம் றஸூல்மாரை மூமின்களை
மேலானிறை வேதந்தனி லேவினன்.

(826) வரிசை மிகஉள்ள ஈஸாநபி
வாகாயருந்துவார் அவர்தம்தயார்
பிரிசமுடன் கொட்டை நூற்றதினல்
பிறப்பட்டால் காட்டில் குழைகள் தின்பார்.

(827) இரும்புதனை கையால் பிசைந்து அங்கி
இனிய நபி தாவூ தவருண்டாக்கி
விரும்பி விலைசெய்து தாமருந்தி
மிஸ்கீன் எளியார்க்கு மளித்திடுவார்.

(828) நல்லஹலால் தின்ன நலவுசெய்ய
நாயனளவிலே கேளுமென்று
அல்லும் பகலுமாய் ஜிப்ரீல் என்னோ
டருளுவா ரென்றார் நபியிறஸூல்.

(829) என்மேல் தினந்தோறு நூறு மட்டு
எவராகிலும் ஸலவாத் தோதினல்
இம்மை தனி லொருக்கா லுமிடி
இல்லையெனச் சொன்னரிறஸூல்நபி.

(830) தினந்தோறு நூறு மட்டெனக்குச்
சிறப்பாம் ஸலவாத்துச் சொன்னோருக்கு
இனஞ்சேர் கியாமத்தி லேழுபத்து
ஏற்றமுள நாட்டம் பெறுவானென்ருர்.

(831) வெள்ளிக்கிழமையில் தமானீன்மட்டும்
விரும்பி ஸலவாத்துச் சொன்னோர்கள்தான்
தள்ளுண்ட தமானீனண்டதின்
தண்மைச் செயல்போ மென்ருரிறஸூல்.

(832) வல்ல ஒரு மனுவானோர்கள் பால்
வார்த்தை நிறைவேற்ற வில்லாவிட்டால்
தொல்லைக் கொலை மிகுந்திருக்குமென
சொன்னர் நபியுல்லா(ஹ்) தொனியாகவே.

(833) கல்பா லுரப்பான சேவகனுய்க்
கருத்தா யிருப்பீரென்றலீ தமக்கு
கல்விமிக உள்ள நபியிறஸூல்
கனமாய் வஸிய்யத்தாய் உரைக்கலுற்ருர்.

(834) ஒருதன் உனதுபாலொரு கருமம்
உறுதியுடன் கேட்டாலவனுக்கந்தக்
கருதுங் கருமத்தை யிறுப்பீரென
ஹைதறெனு மலி தமக்குரைத்தார்.

(835) பிரிசப்படுத்துதல் முஸ்லிம்களைப்
பேணும் அமலுக்கெல்லா மிகுதி
வரிசை யமலாகுமென உரைத்தார்
வள்ளல் முஹம்மது நபியிறஸூல்,

(836) துய்மையுமு ஈமான் பாதியென்றும்
துதியாம் அல்ஹம்துலில்லா(ஹ்) வென்றும்
நன்மைக் கலிமா மீஜான் தராசை
நயமாய்க் கனமாக்கி நிரப்புமென்ருர்.

(837) நலமாயுழுச் செய்தால் பாவமெல்லாம்
நகக்கண் தனில் நின்று புறத்திப்பட்டு
பெலமாய்க்கழலு மென்றுரைத்தாரென்ன
பேசினு ரெங்கள் உதுமானென்போர்.

(838) பாங்காயுழுச் செய்து பின்புரண்டு
பரிவாய் ரக்ஆத்து தொழுதுக் கொண்டால்
தீங்கா முன்தோஷம் போமெனவே
செப்பினுர் உதுமான் அமீறு.

(839) உங்கள் அமல்தனீ லேற்றமான
உறுதியுள்ள அமல் தொழுகையென்று
சங்கையுடனறிந்திருங்கோ ளென்ன
சாற்றினுரென்ருர் தூபா னென்போர்.

(840) துய்ய வுழூதனில் இஸ்முல்லா(ஹ்)வை
சொல்லாதிருந்தோர்க்கு உழூவில்லையென்
றைய மணுகாத நபியிறஸூல்
அமுதமணி வாயாலருளிச் செய்தார்.

(841) துட்ட மிருகத்தின் தோலுடுக்க
துய்தாயதை விரித்திருக்க விற்க
கெட்டிநபி நஹீச்செய்தாரென்ன
கிரியை யழைப்பித்த நபியோதினுர்.

(842) நாயா மிருகம் வாயிட்டாலதில்
நன்ரு யெழுமுறை யொருக்கால் மண்ணுல்
தூயபுனல்கொண்டு அதனை நீங்கள்
துய்யபடி கழுகுங்கோளென்ருர்.

(843) வெள்ளிக்கிழமையில் முழுகிறது
மேலான பாலினானோர்கள்மேல்
தள்ளுண்ணு வாஜி பாகுமென்ன
சங்கை நபியுல்லா(ஹ்)சாற்றினரே.

(844) மாத விடையான மாதர்களின்
வதனந்தனை ஹலாலென முகந்து
நீதமுளநபி தமைக் கேட்டபின்
நெறியாய்பரு முறிமேலாமென்ருர்.

(845) பெரும் பாவந்தனைத் தவிழ்ந்து கொண்டு
பேணித் தொழு மஞ்சுமிடையி லுள்ள
விரும்பா பிழை யெல்லாமழிக்குமென
மேலா முஹம்மது நபியோதினர்.

(846) விரிச்சிகன் உதிக்குமுதலும்
மேலான இராப்புகுமுதலும்
பரிச்சிதமாக வணங்கினோர்கள்
பாழாம் நரகத்தில் புகுதாரென்றார்.

(847) முன்ஸப்பிலுண்டாம் வரிசைதன்னை
மொழியும் அதான்பாங்கின் பேறுதன்னை
அன்பாயறிந்தோர்கள் கரைகள் போட்டு
அழகா யெடுப்பாரென்று ரிறஸூல்.

(848) பாங்கின் தொனிதனைக் கேட்டதெல்லாம்
பாங்கு மொழிந்தோர்க்கு நாளைசாட்சி
பாங்காயுரைகுமென் றுரைத்தாரென்ன
பயனாம்பர்தோழர் குத்ரி சொன்னர்.

(849) பாங்குதனைக் கேட்டாலாகுமப்ப
வண்மை துஆ ஓதினோருக்கு என்
தீங்கில்லா மன்றுட்டுண்டாமென்ன
திங்கள்தனை மண்ணிலழைத்தோர் சொன்னர்.

(850) ஆதிதனை நாடி எழுவருஷம்
அழகாய்தான் பாங்கு சொன்னோருக்கு
நீதிநரகம் விட்டுரிமைச் சீட்டு
நெறியாய்க் கிடைக்குமென்றுரிறஸூல்.

(851) அல்லா(ஹ்) தனக்காக ஒரு மஸ்ஜித்
அழகா யெடுத்தோர்க்கு ஒரு மாளிகை
நல்ல சுவர்க்கத்திலுண்டாமென
நாதர்முஹம்மது நபியோதினர்.

(852) வரிசை நபியுல்லா(ஹ்)ஸபரில் நின்று
வண்மையுடன் வருவார் பள்ளியில்
பிரிசமுடனொரு ஸலாம் தொழுது
பிரிவாரகந்தனில் ழுஹாநேரமே.

(853) வழியில் கிடக்கின்ற கல்லுமுள்ளை
வாகாயதை நீக்கி எறிகிறது
தெளிவான நன்மையாகுமென
தீங்கில்லா நபிசெப்பினரே.

(854) எந்தன் உம்மத்தில் கூலிதன்னில்
இருக்கும் மஸ்ஜிதில் கூளம்தன்னை
அந்தமுடனீக்கி யெறிவதென்றார்
அரணை நிறுத்திய அருமைநபி.

(855) பள்ளிதனைத் தேடி இருட்டின் நேரம்
பாங்காய் நடப்போர்க்கு கியாமத்து நாள்
தெள்ளிதாம் ஒளிவுண்டாமென
தீனத்துளநபி செப்பலுற்றார்.

(856) ஆகாக் கவிசொல்லக் கொள்ளவிற்க
அத்லான ஹத்து நிறைவேற்றவும்
வாகுபெற பள்ளி தனிலிவைகள்
வண்மையுடன் செய்ய விலக்காமென்றார்.

(857) ஜாமாஅத்துடன் கூடித்தொழாத ஊரில்
ஷைத்தா னடர்ந்தேறி யிருப்பானென்ன
நமாஜ் மிகச்செய்யும் நபிஹதீதால்
நல்ல அபுத்தறத்தா வுரைத்தார்.

(858) சடைவு வருத்தாமல் இலேசாகவே
சங்கை இமாமத்துச் செய்யுங்கோளென
படைப்போர் தனில் வெற்றி பெற்றுவரும்
பயகாம்பர் சொன்னார் பாங்குடன்.

(859) ஏலாத பேர்கள் நசலாணிகள்
இனிய கீருமமுண்டான பேர்கள்
கோலம் பெற உண்டு ஆகையினல்
குணமாய் இமாமத்துச் செய்யுமென்றார்.

(860) சடைப்பாய் இமாமத்துச் செய்வோர்களை
சங்கை நபியுல்லா(ஹ்) முனிந்து கொண்டு
படைப்பா மனுவுக்கு லேசாகவே
பாங்காய் இமாமத்துச் செய்வீரென்றார்.

(861) ழுஹ்று தனக்கு முன்னு பின்னல்
துய்தா நப்லெட்டுத் தொழுதோர்களே
சுக மில்லாத் துன்ப நரகத்திற்கு
துய்யோன் ஹறுமாக்கு வானே எனருர்.

(862) அஸ்று தனக்கு முன் நப்ல் தொழுவோர்
அற்பஆ றகஆத் தெனவே
ஹஸனுர் தகப்பனுர் அலியா ரிது
கனதியுடன் பேசிக்கொடு வந்தாரே.

(863) ஆறுறக ஆத்துத் தொழுது வந்தால்
அழகாய் மக்ரிபு தனக்குப் பின்பு
வாற வருஷத்து இபாதத்துக்கு
வாகு பெறச் சரியாகு மென்ருர்.

(864) வரிசை ழுஹாஆறு ஸலாம் தொழுதால்
வண்மையுள பொன்ளு லொரு மாளிகை
பிர்தவ் ஸெனுஞ் சொர்க்கந்தனி லுண்டென
பேசினுர் பெருமானிறஸூல்.

(865) பாவந்தனைச் செய்து பின்னெழுந்து
பதறி யொரு ஸலாம் தொழுதிருந்தால்
சாவில்லா நாயன் பொறுப்பானென
சாற்றிஞ ரென்ரு ரபூபக்கறே.

(866) பாங்கும் இகாமத்தும் இல்லாமலே
வரிசையுடன் பெருநாளில் தவம்
பாங்காய்த் தொழுதே னென்றுரைத்தா ரெங்கள்
பயநாம் பர்தோளர் ஜஃபறுவே.

(867) நசலே மினவுங்கள் சிறை விடுங்கள்
நலமாய்ப் பசியாற்றுங்கோள் ஜனுஸா
குஷியாய்த் தொடருங்கள், அலேக்கும் ஸலாம்
கூறுங்கோ ளென்று நபி கூறினுர்.

(868) வரிசை முஸ்லிமை மினவிஞேர்கள்
வண்மை சுவர்க்கத்தின் தோப்பதிலே
பிரியாதிருக்கிருரென உரைத்தார்
பேணியவர் பக்கலிருக்கு மட்டும்.

(869) அத்திதனில் விடிவேளைதனில்
அழகாய் முஸ்லிமை மினவினோர்க்கு
அந்தமுள வெழுபதினாயிரம்
அமரர் துஆத் தேடுவார்களென்றார்.

(870) ஸாஆ லொருஸாஉ கோதுமைதான்
சங்கை மிகவுள்ள நெல்லரிசி
வாகாய் பித்ரு ஜகாத்தளிக்க
வாஜிபா மென்றார் நபியிறஸூல்.

(871) தனக்கும் தேவிக்கும் பிள்ளைகட்கும்
சங்கை யுளதீனினடியாருக்கும்
கனதியுள தீனின் மிஸ்கீனுக்கு
ஹஜ்ஜல்லாப் பெருநாளி லீவாய்.

(872) சாகும்பொழுது நூற்திர்ஹம் வெள்ளி
தருமாயளிப்பதி லோர்திர்ஹம்
வாகாய் ஹயாத்துடனளிக்கிறது
வரிசை யுள்ளதைகளுக்கு மென்றார்.

(873) துஞ்சும் பொழுதுரிமை ஸதகா
துய்யபடி செய்வோர்க் குவமைநபி
மிஞ்சு மசனத்தை ஹத்யாச் செய்யும்
விரயம் தனக்கொக்குமென உரைத்தார்.

(874) முஸ்லி மொருபயிர் நடுதலத்தில்
முயன்று நடப்பேர்கள் பறவை யூர்வை
குஷியாய ருந்தினால் ஸதாகாவென்று
கூறினாரெங்கள் நபியிறஸூல்.

(875) தவனச் சுணங்குக்குத் தண்ணீர்வார்த்த
தண்மை ஜினாச்செய்த வேசியர்க்கு
மவுலாபிழை பொறுத் தானெனவே
மன்னர் முஹம்மதுநபி யோதினார்.

(876) வழியிற் கிடந்த முள் தனைக் களைந்து
வடிவாயெடுத் தெறிந்தோனுக்கிறை
தெளிவாய் பிழை பொறுத்தவனைச் சொர்க்கம்
சேர்ப்பானெனச் சொன்னார் சீமானபி.

(877) பூனைதனைக்கட்டி ஒரு வஸ்துவும்
போடாதிருந்தது செத்ததானால்
ஈனக்குணத்தினாலவனெருப்பில்
வீழ்வானெனச் சொன்னார் நபியிறஸூல்.

(878) வீடுதனிற் புகுந்திக்லாஸுடன்
விருப்பமுள்ள பாத்திஹா ஓதினால்
ஓடுமிடி யென்றும் கைறு நன்மை
உண்டாகுமென்றும் நபி கூறினார்.

(879) ஆதி தனைநாடி யாஸீன் ஸூறத்
தழகா யோதினோர்க்கரியநாயன்
நீதமணுகாத பிழையை யெல்லாம்
நெறியாய்ப் பொறுப்பா னென்றாரிறஸூல்.

(880) இக்லா ஸெனும் ஸூரத் தோதி வந்தால்
இனிய ஸலாத்தெனுந் தொழுகையின் பின்
அஹ்வா லெனும் பலாயவ் மில்வந்து
அணுகாதெனச் சொன்னார் ஆலநபி.

(881) அழகாய் இஸ்திக் பாற் செய்தோர்க்கு
ஆஸ்மான் புவிமலை யலைநிரம்ப
மழைபோல் மணலெண்ண முண்டாம் பிழை
மன்னன் பொறுப்பா னென்றாரிஸூல்.

(882) இந்த வகையுண்டாம் பிழை பொறுத்து
இவ் வண்ணம் நம்மை தறஜாத்துகள்
அந்தமுள ஆதி கொடுப்பானென
அண்ணல் அஹ்மது நபி யோதினார்.

(883) எந்தனடியாரில் மிக உவப்பர்
என் பாலிரவையில் ஸஹற் நேரத்தில்
அந்த முடன் பிழை பொறுக்கத் தேடி
அழுவோ ரெனச் சொன்னானாதி யென்றார்.

(884) சலிப்பானோர் காதில் பாங்குசொன்னால்
தள்ளுண்டு சலிப்பகலு மென்ன
அலப்பிலா நபி சொன்னாரென்ன
அலியா ருரைத்துக் கைகண்டேனென்றார்.

(885) ஹுஸைனும் அவர்மகனர் ஜைனும்
குணமாமவர் மகனர் பாகிறும்
குஷியாமவர் மகனர் ஸாதிகும்
குறியாய் நாங்களும் கண்டோமென்றார்.

(886) பாங்குதனைக் கேட்டு மறுகவென்ன
வண்மையுடன் அதின்நேரம் சொன்னல்
பாங்கா யிருபதுலட்ச நன்மை
பரிவாக க்கிட்டும் தீங்கதுபோல்.

(887) நீங்கு மிருபது நூறுயிரம்
நெறியாம் தறஜாத்து முண்டாமென
பாங்கரெனும் யாரோடுரைத்தா ரெங்கள்
பண்டு மயிலாக நின்றநபி.

(888) ஆண்டாலொரு ஆண்டல்லா(ஹ்)வை நாடி
அழகாக அதான் விளித்தோர்கள்தான்
ஆண்டான் சுவர்க்கத்துப் படியினின்று
அழகாய் ஷபாஅத்துப் பெறுவாரென்றார்.

(889) வித்று தொழாதவரென்னும் மத்தில்
விருப்பமுடனல்ல வென்று நபி
வெற்றியுடன் சொன்னரென வுரைத்தார்
மேலான யாரில் லுவைதென்பவர்.

(890) கலிமா ஷஹாதத்தும் தவம் ஜகாத்தும்
கனதிறமழானில் நோம்பும் ஹஜ்ஜும்
நலமான இஸ்லா மிதுமேல்
நன்றாய் எடுப்பாய்ச் சென்றாரிறஸூல்.

(891) சக்கு வருத்திற கருமம்விட்டு
சந்தாபமில்லாக் காரியத்தை
வெற்றிபெற வேண்டுங்கோளெனவே
விளம்பினர் எங்கள் அலீஹஸனர்.

(892) ஆதிக்குமவன் சுவர்க்கத்திற்கும்
அடுத்தோர் ஸகீ யெனுங்கொடையுள்ளாரென்
றுதம் அவ்லாதுக்கரசாய் வந்த
அழகான ஆலநபியோதினர்.

(893) பகீலான மாந்தர் இறைவனுக்கும்
மணமான சொர்க்கபதி தனக்கும்
அகன்ற மனிதரென் றுரைத்தாரென்ன
அண்ணல் அபூஹுறைறு வென்பவர்.

(894) ஸகி யெனும் ஜாஹிலிறை யளவில்
தவஞ் செய்யும் பகீலவன் தன்னிலும்
மிகுதி யுகப்பாக இருப்பானென
மின்னே வடுவாக்கு மன்னர் சொன்னர்.

(895) இஸ்லா மார்க்கத்தில் சங்கட்ங்கள்
இல்லை யெனச் சொன்னர் நபி யெனவே
குஷியான அனஸ் இப்ன் மாலிக்கும்
குத்ரி றழியல்லாஹு அன்ஹும் சொன்னர்.

(896) உண்டென்றுரைப்பவன் சாட்சிகொண்டு
உறுதிகொடு வருவானெனவும்
தண்டியவனேடு இல்லை யென்போர்
சத்தியம் செய்வாரென உரைத்தார்.

(897) பகைமை பாராட்டவேண்டாம் நீங்கள்
பரிவாய் சடுத்தங்கள் போடவேண்டாம்
தகைமையுள உடற்பிறப்பாகவே
சங்கையுடனிருப்பீர்க ளென்றூர்.

(898) பள்ளிவாய்லிற் சில மனிதர்
படைத்தோன் குருனேதி இருந்தாலும்பர்
தெள்ளிதாய்ச் சிறகாலவரைச்
சிறப்பாகப் பொதிந்திருப்பாரென்றூர்.

(899) வம்பிக்கப்பட்ட கருமங்களை
மறதி கருமமாய் வரும் பிழையைத்
தம்பிரான் பொறுப்பானெனவே
ஸாவா அறல்வற்றப் பிறந்தோர் சொன்னர்.

(900) அந்தியானல் நான் விடிவேனென்று
அகத்தில் நினைக்கவேண்டாம் விடிந்தால்
புந்திதனைக்கொண்டு அந்திதனில்
புகுதுவேனென்றும் நினையாயென்றூர்.

(901) சாவுதனக்கேற்ற அமல்கள் தன்னை
சங்கை ஹயாத்தாக இருக்கையிலே
ஆவலா யெடுத்திருங்கோளென்ன
அன்னை பிதாக் குயிரளித்தோர் சொன்னார்.

(902) வேதம்தனிலுள்ள கருமத்திற்கு
மேவியதன்படி நடக்கார்கள் தான்
நீதமுள ஈமானில்லாரென்ன
நிகழ்த்தினர் நிழல் விழாத நபீ.

(903) உந்தன் பிழைகீங்குல் விசும்பளவும்
உறுதியுட னுயர்ந்திருந்தாலுமாம்
அந்தமுடன் இஸ்திக்பாறு சொன்னால்
ஆகி பொறுப்பானென்றாரி றஸூல்.

(904) பூமி நிரப்பமாய்த் தோஷம் செய்து
பொஞ்சா இணையன்றி என் பால் வந்தால்
நேமி நிறைந்த பூமி நிரம்ப
நெறியாய்ப் பிழை பொறுத்தவன் தனக்கு.

(905) சேமித்துக் கொடுவருவேனென்ன
சீமானுறுதியாய்ச் சொன்னானென்று
ஆமினா மகன் உரைத்தாரென்ன
அனஸூ இப்னு மாலிக்உரைத்தார்.

(906) புருஷர் மவ்தான பூவைமார்கள்
பூணாரம் கோலக்கலையுடுக்க
பரிவாய் மருதோன்றி ஸூர்மாயிட
பாங்கல்ல ஹறாமாகுமென்றார்.

(907) பெண்ணின் அவ்றத்தைப் பார்த்தோர்கள் மேல்
பூண்ட 'விதியாச்சு மஹ்றெனவே
அண்ணல் நபியுல்லா(ஹ்) சொன்னாரென
ஆலிம் பைஹகீ யருளிச்செய்தார்.

(908) பிசகாங் கருமத்தில் விழுந்தோர்கள் தான்
பிழையாம் ஹறாமான காரியத்தில்
மசக்கி விழுந்தோர் போலாகுமென்ன
மன்னர் முஹம்மது நபியோதினர்.

(909) புத்தி நஸீஹத்துச் சொல்லுமென
போற்றி நபி தம்மைக் கேட்டளவில்
சத்தியணுகாத கோபந்தன்னை
சங்கையுடன் காட்டாயென நவின்றார்.

(910) நாணமெனும் ஹயா உமக்கில்லையால்
நாடுங்கருமங்கள் செய்யுமென்றும்
ஆணித்தரளத்தை வடுவாக்கும் பல்
ஆன் முஹம்மது நபி யோதினர்.

(911) அழகான நல்ல குணமாகவே
அவனி தனிலுள்ள மனிதரோடு
தெளிவாய்க் கலந்திருப்பீரெனவே
தீராப் புகழுள்ள நபி யோதினர்.

(912) எந்தத் தலத்திலும் ஆதி தன்னை
இனிதாய்த் தக்வாச் செய்திருப்பாயென்றும்
அந்தமுள நன்மை தீன்மைகளை
ஆய்ந்து கொடு வந்தால் பிழைப்பாயென்றார்.

(913) கேட்டாலிறை பக்கல் கேட்பீரென்றும்
கிருபையுட நற்றுசை தேடினல்
வேட்டமுடனுதி பால்தே டென்றும்
வீரர் முஹம்மது நபியோதினர்.

(914) லோகரடங்கலும் ஒன்றாய்க்கூடி
உனக்குப் புரோசனந் தீங்குகள் தான்
மோக மனம் வைத்துத் துணிந்தாலுமாம்
முன்னாள் விதியன்றிக் கூடாதென்றார்.

(915) வாழ்வுதனில் அல்லா(ஹ்)வை நினைத்தால்
வல்ல பெரியவன் உனை நினைப்பான்
சூழும் பலாயிலும் நினைத்தாயாகில்
தூய்யோன் அகற்றுவானென உரைத்தார்.

(916) ஸப்றேடுதவி யுண்டாகுமென்றும்
தன்மை பலாய்விட்டு கலாஸுண்டென்றும்
புவியில் ஜினுவுடன் மிடியுண்டென்றும்
புர்கான் முஹம்மது நபியோதினர்.

(917) பர்ழாம் தொழுகையு மிறுத்துவந்து
பாங்காய் றமழானி னேன்பும் வைத்து
திறமாய் ஹலால்செய்து ஹறும் தவிர்ந்தால்
ஜன்னதெனும்பதி கிட்டுமென்றார்.

(918) நன்மைதனைக்கொண்டு ஏவுறதும்
நாற்றமுள்ள தீங்கை விலக்கிறதும்
இம்மைதனில் பூவைஹலாலுடனே
இனிதாயடுக்கலும் ஸதகாவென்றார்.

(919) மணமான சொற்கள் ஸதகாவென்றும்
வாகாய்த் தொழுகைக்கு நடக்கிறதும்
குணமாம் வழித்தீங்கை நீக்கிறதும்
கொடையான ஸதக்கா வாமென்றார்.

(920) நற்குணம் நன்மை யாகுமென்றும்
நாற்றமணுகிய துர்க்குணங்கள்
ஹக்காகப்பாவ மாகுமென்றும்
கனலிதனை யழைத்தோருரைத்தார்.

(921) புருஷன் கீழ்ப் பெண்ணைப் படிற்றூறுகள்
பொய்யாயுரைப்பது நூருண்டதின்
வரிசை யமலெல்லா மழிக்குமென்ன
வள்ளல் முஹம்மது நபியோதினர்.

(922) மணமாம் நறை பூசி மானிடர்கள்
வரும் போம் வழியேகு மரிவையர்கள்
குணமாய் ஜினச்செய்த வனிதையென்று
கூறின ரெங்கள் கோமானபி.

(923) குழந்தை பைத்தியரிவர்களுடன்
கூப்பிட்டுப் பேசல் வழக்குரைகள்
தெளிந்த விலக்காகு மிவைகளெல்லாம்
சிறப்பான பள்ளிதன்னிலென்றார்.

(924) வெள்ளிக்கிழமைகள் தோறு நீங்கள்
மேலான மணப்புகையாகவே
பள்ளிதனை மணமாக்குமென்ன
பாரிலெரிநூர ப்பிறந்தோர் சொன்னர்.

(925) வண்மையுள பள்ளிதனிற் புகுந்தால்
வாகா யிரு றக்ஆத்துத் தொழ
உண்மையுள ஸுன்னத்தாகுமென்ன
உரைத்தார் உலமாக்கள் கிதாபுதனில்.

(926) புகுந்தால் மஸ்ஜிது தனிலோர் ஸலாம்
போற்றித் தொழுங்கோளென் றிறஸூல் நபி
பகர்ந்தாரெனச் சொன்னார் அபூஹுறைறு
பதியிலுள மாந்தர் பரிவாய்த் தொழீர்.

(927) உத்தாரமன்றி யொருவீட்டிலும்
ஒருவரும் புகவேண்டாமென்ன
ஷத்தாது, ஆதையழித்த நாயன்
சங்கையுள வேதந்தனிலுரைத்தான்.

(928) வீடுதனி லெட்டிப் பார்த்தோர்கள் தன்
விழியிலெது கொண்டுங் குத்துங்கோளென்
றுடுதனை ஹயாத்தாக்கி வைத்த
அண்ணல் முஹம்மது நபியோதினர்.

(929) நிகாஹு தனை செய்து ரிஸ்கிரணம்
நெறியாகத் தேடுங்கோளெனவே
மக்கத்தஹ்மது நபியிறஸூல்
வாழ்த்தினு ரென்று ரிப்னு அப்பாஸ்.

(930) பத்தினி தன்னைத் தானடியே
பரிவாய் நிகாஹு செய்வோர்களுக்கு
சத்தியுள நாயனுதவி செய்ய
தகுமாமவன்மே லென்றாரிறஸூல்.

(931) எளிமைத் தனந்தன்னை யொருவர் வந்து
ஏந்தல் நபிபக்க லுரைத்தபோது
தெளிவாய்க் கலியாணஞ் செய்யெனவே
செப்பினர் செப்பமான நபி.

(932) வீடுதனிற் புகுந்தால் ஸலாம்கள்
விரும்பி யுரைத்துப்பின் பிஸ்மிச்சொல்லி
நாடியசனஞ் செய்தால் ஷய்தான்
நகழுவானென்றார் நபியிறஸூல்.

(933) அஞ்சு காரியம் தன்னைக்கொண்டு
அனஸ் றழியல்லாஹ் அன்ஹுவுக்கு
மஞ்சு குடையாக வந்த நபி
வண்மை வஸிய்யத்தா யுரைக்கலுற்றார்.

(934) வரிசை உழுவுடனிருந்தாலுங்கள்
வாணாள் நீளிக்கும் வண்மை ஸலாம்
பிரிசமுடன் சொன்னால் கண்டபேர்க்கு
பெருகும் ஹஸனாந்து இல்புகுந்தால்.

(935) பரிவாய் ஸலாம் சொன்னால் வீட்டாருக்கு
பதியிலுள்ள கைறு மிகுந்திருக்கும்
கருதும் ழுஹாத் தொழுவாய் சின்னர்மேல்
கருணைக் கிருபையா யிருப்பாயென்றார்.

(936) சிறியார் தனக்கு நீ இரக்கமுற்று
சிறப்பா முதியோரை யாசரித்து
குறியாயிருந்து கொண்டாலென்னுடன்
கூடி கியாமத்தி லிருப்பாயென்றார்.

(937) மலைபோல் ஹஸனாத்து நன்மைகொண்டு
வருவார் சிலபேர்கள் கியாமத்துநாள்
நிலைகே டணுகுவோர் நன்மைகளை
நீதி புழுதியா யழித்துப்பின்பு

(938) தொலையா நரகத்தில் விடுவானென்ன
சொன்னார் நபி அப்ப, ஸாலி மென்பேர்
தலைமை நபி தம்மைக் கேட்கலுற்றார்
சங்கை யணுகாரைச் செப்புமென்றே.

(939) அப்போ துரைக்கலுற்று ரிறஸூல்
அழகாய்த் தவமிக அல் பகலாய்
செப்பமுடன் செய்வார் ஹறாமைக் கண்டால்
தீவிரமாக வீழ்வா ரென்றார்.

(940) இஸ்லாம் தனில்வாருங்கோள் நீங்கள்தான்
ஈடேற்றம் பெறுவீர்களென்றும்
குஷியாய் வழிப் படுங்கோளிறைக்கு
குணமாய் நேர்வழி பெறுவீரென்றார்.

(941) ஹஸ்ஸான் புலவனூர் தம்முடனே
கருணை நபி சொல்வார் காபிர்களை
அச்சப்படுத்தி நீர் வசை கவிகள்
அஞ்சாமற் சொல்லென் றழகாய்க் கேட்பார்.

(942) மின்பற் தனைப்போட்டு பள்ளிதனில்
மேலான ஹஸ்ஸான் புலவருக்கு
அன்பியாக்கண்ண லுரைப்பார் கவி
அழகா யுரைத்திடுவீ ரெனவே.

(943) சொல்லும்பொழுத் சொல்வாரிறஸூல்
துய்மை யணுகாத காபிர்கள்மேல்
கொல்லும் வாளினில் கடினமாக
குறித்து விடுமென்று நபி கூறினர்.

(944) வண்மையுள ஹஸ்ஸானுவதனில்
வரிசை ஜப்றயீல் உண்டெனவே
உண்மை நபியுல்லா (ஹ்) சொன்னரென
ஓசை அபூஹுறைறு வுரைத்தார்.

(945) சலிப்பு மிக உள்ள கல்புதன்னை
சந்தோஷமாவான் தம்பிரானென்
றலைப்பொன் றணுகாத நபியிறஸூல்
அருளினரென்றுர் அபுத்தற்தா.

(946) சலித்த மனுவானேர் கியாமத்து நாள்
சங்கை அறுஷின் கீழ் நிற்பாரென்ன
பெலத்த மனமுள்ள நபியிறஸூல்
பிரிசமுள யாரோடுரைக்கலுற்றார்.

(947) ஆகிறம்தனக் கீமான் கொண்டும்
அழியும் துன்யாக்காயமல் செய்வோர்கள்
வாகாய்ப் புதுமையாகுங் கோளென
வள்ளல் முஹம்மது நபியோதினர்.

(948) துனியாதனில் ராகங் கேட்டோர்கள்தான்
துய்ய சொர்க்கத்தின் ராகவோசை
இனிதாகக் கேட்க மாட்டாரென்ன
இயம்பின ரெங்கள் நபியிறஸூல்.

(949) ராக வொலிவோசை கல்புதனில்
நாரமெனும் நீர்வெள்ளாமைதனை
வாகாய் முளைப்பிக்கும் பரிசுபோல
வடுவாம் நிபாக்கை யுண்டாக்குமென்ன

(950) மேகம்போல் மிக ஹதீது செப்பும்
விருப்பமுள இப்னுமஸ்வூ தென்போர்
தாகமுடன் சொன்னரென கிதாபில்
சங்கை அஸ்அதி சாற்றினரே.

(951) சத்தந்தனை விட்டு ராகமாக
சாற்றினோர் பக்கல் இருஷைத்தான்
வெற்றிபெற இருதோட் புயத்தில்
விருப்பமுடன் தரித்திருக்கு மென்றார்.

(952) அப்பாஸு மகன் பழ்லென்பவர்
அருளின ராகம் ஸினைத் தனக்கு
செவ்வான மந்திரம் எனவே
ஜெகத்திலுள பேர்க்கு உரைக்கலுற்றார்.

(953) ராகத் தொழிலெல்லாத் தொழில்களிலும்
நாற்றமிக உள்ளதொழி லெனவே
வாகா யழகான அனஸென்பவர்
வாழ்த்தினரென நூர்ல் சொன்னார்.

(954) கின்னர ராகம் நாக சின்னம்
கீழ்மையுள வேசை தங்கள் ராகம்
மின்னத்துடன் கேட்போர் நரகரென்ன
மேலான உலமாக்கள் சொன்னார்.

(955) நேராம் உலமாக்கள் சொல்லுரையை
நெறியாகக் கேட்டு விசுவசித்து
சீராம் வஸிப்பத்தாய் லுக்மான் ஹகீம்
செப்பும் செயலை கொண்டாரிறஸூல்.

(956) முக்காடு போட்டுத் திரியாயென்று
மேலான லுக்மான் புத்தியாலே
ஹக்காம் புதல்வருக்குரைத்தாரென்ன
கவிழ்ந்துவிழ புத்து எழுந்தோர் சொன்னார்.

(957) தன்ஸீல் ஸஜதாவும் நபாறகையும்
தகுமாயோதுமட்டு றங்காரென்ன
முஞ்சுகுணமில்லா ஜாபிறென்போர்
மொழிந்தாரெனச் சொன்னார் துர்றுடயோர்.

(958) சிறகுதனைக் கொண்டு கியாமத்து நாள்
சிறப்பாய் நிழலிட்டுப் பொதிந்துக் கொண்டு
செறியாயொரு தீங்கு வராமல் காத்து
ஜன்னத் தெனும்பதி சேர்க்கு மென்றார்.

(959) துகிலாம் பிடவையப் பரண்டையின் கீழ்
துலங்க, உடுத்தோரை இறை முனிந்து
அகல்வானெனச் சொன்னார் நபியெனவே
அருளினார் அபூஉமாமத் தென்போர்.

(960) பெண்ணைய்ப் பிறந்தவள் வீடுதன்னில்
பிரியா திருந்தாக்கால் பீஸபீலின்
திண்ணமுள்ள கூலி பெறுவாளென்ன
சிறப்பான நபி செப்பலுற்றார்.

(961) ஸவ்தாவெனும் நம் பிராட்டியார்தான்
ஸனீறு வெளிப்படவந்த தென்றி
தவனமாய் வெளிப்பட்டாரில்லை
தகுமாய்த் தரிபட ஏவியபின்.

(962) அழகான ஆடை கொடுக்காமலே
அகத்தில் தடை செய்து பீவியரை
ஒழுங்கு வருத்துங்கோவென உரைத்தார்
உலகந் தனிலுள்ள உலமாக்களே.

(963) கிட்டுமை யன்றிக் கடப்பன்றியே
கொடுக்கும் அது குடும்பத்தோருக்கும்
வெட்டும் படைதனக் களிப்பதுக்கும்
மேவுமெனச் சொன்னார் விண் கடந்தோர்.

(964) ஆதிதனை திகிற் செய்யாதபேர்
அகல்வார் களீமான் தனைவிட்டென
நீதி நபி யுரைத்தாரெனவே
நிகழ்த்தினார் அபூஹுறைறு வென்போர்.

(965) மிகுதி இறைதன்னை திக்ரு செய்தோர்
மேலாம் தறஜாத்துள்ளோர்களென
அஹ்மது நபி யுரைத்தாரென
அஸ்ஹாபீ அபூஸயீ துரைத்தார்.

(966) சுவர்க்கந் தனிலுள்ளதோப்புதனை
துய்தாக மெய்யாய் நாடினோர்கள்
மவ்லா திக்ர்தனை மிகுதமாக
வண்மையுடன் கொண்டு வரவு மென்றார்.

(967) பாவந்தனை விட்டு பற்றைப்பேணி
பாங்காய் மிக திக்ரு செய்யெனவே
தேவியெனும் உம்மு ஸல்மாவுக்கு
செப்பினர் நபி வஸிய்யத்தாக.

(968) புத்தி யணுகாத மஜ்னூனென்று
புடைசூழ் மனிதர்கள் புகலுமட்டும்
வெற்றி திக்ர்மிகச் செய்வாயென்று
மேலாம் குத்ரியோ டுரைத்தார் நபி.

(969) வரிசை ஸுப்ஹுக்கும் அஸ்றுக்கும் பின்
வண்மையுடன் திக்ரு கொண்டுவந்தால்
பரிவா யிவைக் கிடையுள்ளதுக்கு
படைத்தோ னதற்குயான் போதுமென்றான்.

(970) ஆதிதனை திக்ரு மிகுதி செய்வோர்
அழகான சொர்க்கம் தன்னில் முந்த
நீதி யுகப்பினல் புகுவாரென்ன
நிலைசேர் முஹம்மது நபி யோதினர்.

(971) ஸுப்ஹு தொழுதபின் திக்றுசெய்து
சூரியன் உதிப்பாமளவும்
தவனமா யிருந்தா விரண்டு
சங்கை இஸ்மாயீல் மக்கள் தம்மில்

(972) மவ்லா தமக்காக உரிமை செய்த
வரிசைப்பல னவர்க்குண்டா மென்ன
நபியுல்லா(ஹ்) சொன்னாரென உரைத்தார்
நலமான அபூ உமாமத்தென்போர்.

(973) அஸ்று தொழுதபின் கதிரோனஸ்த
மாகுமளவுஞ் செய்திருந்தால் திகிற்
குஷியாக இரண்டுரிமை செய்த
கூலிதனில் மிக யேற்றமென்றார்.

(974) துய்ய கலிமா ஸுப்ஹானல்லாஹி
துய்தாயதன் பின்பு வபிஹம்திஹி
ஐயமறச் சொன்னால் நூறுமட்டு
ஆயிரம் நன்மை யுண்டாமென்றார்.

(975) வரிசை குருன் வேதம்நிரம்ப ஓதி
வாகாய தன்படி நடந்தோர்கள் தான்
உரிசைத் தகப்பனுக் குடையோனை
உடுத்துவான் தாஜு முடிதலையில்.

(976) பரிதி யொளிவிலும் மிக அழகாம்
பகாரமாய் நின்று துலங்குமென்ன
அரியை அழைப்பித்த நபியிறஸூல்
அமுத மணிவாயா லருளிச் செய்தார்.

(977) தினந்தோறும் ஸுப்ஹானல்லாஹி
சிறப்பான வபிஹம்திஹி யென்
றினிமையுடன் நூறுமட் டுரைத்தால்
ஈனமுள தோஷம் கடல் நுரைபோல்

(978) கனமா யிருந்தாலுங் கழலுமென
கமல முகமான நபியிறஸூல்
தொனியா யுரைத்தாரென் றோதிவந்தார்
துய்ய அபூஹுறைறா வென்பவர்.

(979) நூறு முறை தஸ்பீஹ் செய்தால்
நூறான அல்பு நன்மை யுண்டாம்
மாறான தீமை அல்பாயிரம்
வாகா யழியுமென்றாரிறஸூல்.

(980) பூரிப்பாம் விசயனம் பேசுங்கோ
போக்கின் விசயனம் பேசவேண்டாம்
சிரித்த லேசு உண்டாக்குங்கோ
தீங்காம் வருத்த முண்டாக்காயென்றார்.

(981) யாஸீன்தனை யோதினு லிறைவன்
நலமாம் குருன் பத்து முறையோதின
வாசமுள கூலி கொடுப்பானென
வம்பன் உபைதனை வதைத்தோர் சொன்னூர்.

(982) இரவுதனி லிறைதன்னை நாடி
ஏற்றமுளயாஸீன் தனையோதினுல்
பரிவாக அந்த இரவிலுள்ள
பாவ மடங்கலும் பொறுப்பானென்றூர்.

(983) ஆதி தனைநாடி யோதி வந்தால்
ஆகாப்பிழை முன்பின் உண்டானவை
நாதன் பொறுப்பானென் றுரைத்தாரெங்கள்
நஞ்சை யமுதாக உண்ட நபி.

(984) வரிசையுள யாஸீன்தன்னை ஓத
வண்மையுடன் கேட்டு இருப்போருக்கு
இருபது தீனுற் பீஸபீலில்
இனிதாயளித்த பேர்க்கெதிராமென்றூர்.

(985) வேதம் தனக்கு கல்பான யாஸீன்
விருப்பமுட னொருக்கால் ஓதினுல்
நீதமுட னிருபத்துஹஜ்ஜு
நெறியான கூலிக் கெதிராமென்றூர்.

(986) ஜீனத்துள் யாஸீன் தனையிரவில்
சிறப்பா யத்தின மோதிப் பின்னிறந்தால்
ஈனமணுகாத ஷுஹதாகவே
இருப்பாரெனச் சொன்னூரெம்மிறஸுலில்.

(987) ஆதி யமானத்து த்தொழுகை யென்றும்
அழகானி நோன்பு முழுக்கெனவும்
வேத நபி உரைத்தா ரெனவே
விளம்பினூர் ஸய்யிதிப்னுமாஜா.

(988) சொல்லா வெனச்சொன்ன விசனம்தன்னை
சொல்வது சதிமானமென்ன
நல்லார் நபியுல்லா(ஹ்) நவின்றூரென்ன
நலமான பேரர் ஹஸனுரைத்தார்.

(989) எல்லா வக்திலும் மூமீனுக்கு
இறைவன் கொடுப்பான் கூலிப்பேற்கள்
நல்லபடி பிடியெடுத்து வாயில்
நலமாக வைக்கு மட்டுமென்றார்.

(990) தீனிலுயர்ந்தோர்கள் தம்மைப் பார்த்து
துன்யாதனில் தாழ்ந்தோர் தன்னை நீக்கி
ஜீனத்தாய் நடந்தோரை இறை
சிறப்பாம் சொர்க்கத்து வாழ்வுதன்னில்.

(991) தானமுடனுக்கு வானெனவே
தம்பிரான் நபி சொன்னாரென்ன
ஈன குணமில்லா றஸூலுடைய
ஏற்ற மிகவுள்ள அனஸூரைத்தார்.

(992) ஒருவர் பிறப்புக்கும் இறப்பதற்காய்
உயர்த்தியுள அண்டமீன் விழாது
தெரியா ஷைதான்கள் வானுரையை
சென்று இருஞ்சும் போதெறிவதென்றார்.

(993) ஆதி தனக்கிணை யொருவஸ்தையும்
அவனிதனில் வையாதோர்கட்கெல்லாம்
நீதமுடன் மன்றாட்டுண்டா மென்ன
நீரில் உமிழ்ந்துப்புத் தீர்த்தோர் சொன்னார்.

(994) வரிசை ஜுபைறுக்கு நபியிறஸூல்
வண்மை வஸிய்யத்தா யுரைக்கலுற்றார்
கருதி இதைக்கேட்டுக் காசினியோர்
கனதியுடன் கொடு வருவீர்களே.

(995) உகப்பா முடற்பிறப்பானோர்களை
உயர்த்துவாய் நல்லோர்தனை வலுப்பம்
பகைப்பன்றிச் செய்வா யயல்குநன்றி
பாங்காகச் செய்து இருப்பாயென்றார்.

(996) ஈத்தப் பழநிறை யாகிலுமாம்
ஏழை மிஸ்கீன்கள் தங்களுக்கு
ஏற்றமுடன் கொடுப்பா யெனவும்
இனிய நபி ஜுபைற் குரைக்கலுற்றார்.

(997) சேவகனைத் தினந்தோறு மிறை
செப்பமா யுவப்பா னெனவும்
பாவியொடு கூடி வழி நடக்க
பாங்கல்ல வென்றும் நபியோதினர்.

(998) எல்லா அமலினும் ஏற்றமான
இனிய அமல் பசியாகுமென்றும்
தொல்லை சரீரத்தின் தன்மை தாழ்வு
துகிலாம் கம்பளி யுடுப்புமென்றார்.

(999) உண்டா முடமைக்கெல்லாம் ஜகாத்து
உறுதியுடனுண்டு உடல் தனக்கு
நன்று பளிக்கின்ற ஜகாத்தாவது
நலமாம் பசியென்று நபி கூறினர்.

(1000) தண்ணீர் வஜீவனம் மிகப்பருகி
சங்கையுள கல்பைக் கொல்லவேண்டாம்
உண்ணும் வஜீபனம் பயிரினங்கள்
உதகமிகுத்து கெட்டது போலென்றார்.

(1001) துனியாதனில் வஜ்வனங் குறைத்து
துய்மையுட னிருந்தோரைக் கொண்டு
கனமா இறைவீறு உம்பரோடு
கவல்வானெனச் சொன்னர் காவல் நபி.

(1002) விட்ட வஜீவனந் தனக்கிறைவன்
மேலான விஸ்திலோர் தறஜா
மட்டி லகப்படான் கொடுப்பானென
மண்ணுற் படைதனை முறித்தோர் சொன்னர்.

(1003) வரிசை நபியுல்லா மூன்று நாளாய்
வயிறுதனைக் கட்டிப் பசித்திருப்பார்
கருதி மனம் வைத்தால் துன்யா வாழ்க்கை
காவல் நபி காலில் ஸுஜூதிடுமே.

(1004) தினந்தோறு மிருமுறை தின்பது
செப்பமணுகாத கடப்பெனவே
அனந்தலணுகாத நபியிறஸூல்
ஆயிஷாவோடு அருளிச் செய்தார்.

(1005) வாயால் அபத்திஞல் மனிதர் மிக
வன்னிதனிற் புகுவார்களென்று
நாயன் நபியுரைத்தா ரெனவே
நல்ல அஸ்ஹாபி மாருரைத்தார்.

(1006) நாவாலுறுப்பிஞலும் அபத்தால்
நரகம்தனில் மனுமுகங் கீழதாய்
பாவ வுரையிஞல் வீழ்வாரென
பயகாம்பர் ஆல நபியோதிஞர்.

(1007) ஆதம் மகன் பாவம் அபத்திஞலும்
ஆகாத நாவினுரையர் லென்றும்
காதம் மணமாக எழுந்து வரும்
காயநிழல் மண்ணில் விழாதோர் சொன்ஞர்.

(1008) பேச்சி மிகுதலால் பெருகும் பாவம்
பெருகும் பாவத்தா லெரிநரகம்
ஓச்சமாய் விதியாகுமென
ஓநாயுடன் பேசி நின்ருேர் சொன்ஞர்.

(1009) சித்தீக் அபூபக்கர் வாயுள் கல்லை
செப்பமுடன் வைத்துச் செப்பலின்றி
சத்திமிக விரும்பா ரெனவே
சங்கையுள ஹுஜ்ஜத்திஸ்லாம் சொன்ஞர்.

(1010) சீரில்லாப் பொய்யை செப்பல் செய்து
சிரிப்பை வருத்திஞேர்க் கோய்லெனவே
நேரான நபி மூன்றுமுறை
நிகழ்த்திஞரென யார்கள் சொன்ஞர்.

(1011) துற்குணமான பொய் சத்தியம்
துய்ய மூமின்கள் குணமல்லவென்
றுக்கி எஹும்பான தாய் தந்தைக்கு
உயிரீந் தெழுப்பிய நபியோதிஞர்.

(1012) புறமாமுரை பேசல் ஜிஞதனிலும்
பொல்லாப் பெரும் பாவமாகுமென
திறமாயுரை செப்பும் நபிஇறஸுூல்
தேனின் மதுரமாய்த் தெளிந்தோதிஞர்.

(1013) ஙீபத்தெனு முரை விட்டு நீங்கி
இனிதாக தவ்பாச் செய்தோர்கள் தான்
ஆவல் சுவர்க்கத்தில் புகுவர் தம்மில்
ஆகிறும் பேர்களாகுமென.

(1014) சாவில்லா நாயன் வஹ்யுரையாய்
சங்கையுள மூசா நபி தமக்கு
நாவின்றி யுரைத்தானெனவே
நவின்றார் முகம்மது நபி இறஸூல்.

(1015) தாகந்தனைப் பொறுத்தோர்களுக்கு
தங்கப்பதி சொர்க்கம்தனில் மாளிகை
ஏகன் வஹ்யினு லுண்டாமென
ஏந்தல் முகம்மது நபியோதினர்.

(1016) ஈமான கமியம் நிரப்பமாட்டா
னெந்த அடியானும் தற்கம்தனை
ஜீனத்துடன் விட்டாலொழியவென்று
சீராம் நபி திருவுளமாயினர்.

(1017) முஸ்லிமெனு முடப்பானேருடன்
மோசமுள தர்க்கம் மனேலயந்தான்
வசையா யுரைத்திட வேண்டாமென
மரங்கள் சலாம் செப்பும் நபியோதினர்.

(1018) மனமாக வென்னைக் காண வந்தால்
மறுமை கியாமத்தில் என்னுடனே
கனமாய் அயலாக விருப்பானென
கனதி முடிகாலில் வீழ்வோர் சொன்னர்.

(1019) ஹஜ்ஜுதனைச் செய்து என்னைக் காண
கருத்தாய் வாாதவன் எனை வெறுத்த
கச்ச மனிதனென்று ரைத்தாரென
கலை சேரிப்ன் உமர் செப்பினரே.

(1020) எந்தன் கப்றுதனை கண்டோ ரெனை
இனிதாய் ஹயாத்தினில் கண்டோரென
சந்தல் மணமவர் சிறுநீர்க் கொவ்வா
சங்கையுள முஸ்தபா உரைத்தார்.

(1021) விதியாகு மென்தன் ஷபா அத்தென்னை
விரும்பி ஜியாறத்து செய்தோர்க்கென
மதியை ஹயாவாக்கும் வதனுடைய
மதிசேர் முஹம்மது மகிழ்ந்துரைத்தார்.

(1022) தீங்காம் பிழைக்கெல்லாம் தலையாவது
தீழ்ப்பான துன்யா உகப்பெனவே
தூங்கா மனமுள்ள நபியிறஸூல்
சூழ்ந்த களரியில் தொகுத் துரைத்தார்.

(1023) எளிமைத்தனமின்றி தாழ்ந்தோருக்கு
ஈடேற்றமான தவாவெனவே
குளுமைக் குணமான நபியிறஸூல்
கூண்டகளரியில் கூறலுற்றார்.

(1024) தின்மையுள்ள உம்மத்தெவரெனவே
சீமான்நபி தம்மைக் கேட்டளவில்
இம்மைதனில் சீமானுகுமென
இயம்பினு ரெங்களிறஸூல்நபி.

(1025) தீனூர் திர்ஹமுக் கடிமையான
தீதான தீங்கன் கெட்டோனென
மானுருடன் கொஞ்சி வாழ்ந்திருக்கும்
மன்னர் முஹம்மது நபியோதினர்.

(1026) மாதம்தனில் மூன்று நோன்புகொண்டும்
வரிசைளுஹாக் கொண்டு முறங்குமுன்பில்
நீதமுளவித்ர் தொழுவா யென்றும்
நெறியா மொஸிய்யத்தாய் நபிகூறினர்.

(1027) அவ்வாபெனும் நல்லாரின்றி ளுஹா
அன்பாகப் பேணித் தொழாரெனவே
செவ்வாய்நபி சொன்னுரெனத் தொகுத்து
சிறப்பாம் அபூஹுறைறு உரைத்தார்.

(1028) அனகர் தமக்குரை வஸிய்யத்தாக
அருளினர்நபி ளுஹாத்தொழுகை
கனதியுடன் தொழுவீர்களென்றே
கருணையுடன் காதிம் தமக்கும் சொன்னர்.

(1029) ஆறுசலாம் ழுஹறாத்தொழுது வந்தால்
அழகான பொன்னுலோர் மாளிகை
ஏறும் சுவர்க்கத்தி லுண்டாமென
இலங்கும் நபியுல்லாஹ் உரைத்தனரே.

(1030) பஜ்றுதொழுது பின்முஸல்லாதனில்
பருதியுதிக்கு மட்டும்மிருந்து
குஷியாய் திக்றுசெய்திஷ் றுக்குதான்
குணமாய்த் தொழுதோர்க்கு நரகம்ஹறும்.

(1031) பிஷகின்றி யாகுமென்று ஹஸன்
பேரஞர் சொன்னுர் ஷவியத்தாக
நஸீஹத் துரையாகத் தோழன்மார்க்கு
நவின்றுர் முஹம்மது நபியிறஸூல்.

(1032) இந்தப்படி இருந்திருறக் அத்
திறுத்தால் கபூல்ஹஜ்ஜின் கூலிபோலே
அந்தமுடன்கிட்டு மெனவிறஸூல்
அருளினுரென்று ரபூஉமாமா.

(1033) கடலி னுரையிலும் பிழைமிகுத்து
கறுத்தாலு மிந்தப்படி தொழுதால்
மடியாதிருந்தோர்கள் பிழைகளெல்லாம்
மன்னன் பொறுப்பா னென்றுரிறஸூல்.

(1034) இரண்டு றக்அத்து ளுஹாத் தொழுதால்
இனிய அஸ்ஹாபீ மார்கூட்டத்தில்
அண்டம் படைத்தவன் எழுப்புவானென்
றண்ணல் முஹம்மது நபியுரைத்தார்.

(1035) விருந்து தனக்காக வருத்தப்பட
விலக்கினு ரெங்கள் நபி எனவே
திருந்த உரை பேசும் ஸல்மானெனும்
சிறப்பான பாரிஸீ யுரைத்தார்.

(1036) உண்டாம் ஜீவனம்தனைக் கொடுங்கோ
உகப்பான விருந்தாளிக் கென்றும்
கண்ட விருந்திற்கு வருத்தப்பட
காரியமல்ல என நவின்றுர்.

(1037) வந்த விருந்தரை ஆசரித்து
வண்மையுட னவன்தனைப் பயணம்
அந்தமுட னுக்க வேணுமென்று
அழகாம் ஹதீதுரைத்தா ரிமாம்கள்.

(1038) வருத்தமிது வென்றே நன்மை நாடார்
வாகாய் பொய் சொல்வார் வல்லான் கிர்பை
திருத்தமாய் பெற மனம் வையாதார்
தீஙுறுடையோரென் றிறஸூல் சொன்னார்.

(1039) லாயிலாஹ இல்லல்லாஹ் வென்று
நல்ல கருத்தாக சொன்னார்களை
நாயன் சுவர்க்கத்தில் விடுவானென
நவின்றார் நபி என்று உஸாமா சொன்னார்.

(1040) வரிசைக் கலிமாவை தினங்கள் தோறும்
வண்மையுடன் நூறுமட்டோதினால்
இரவி யொளிபோல வதனமுமா
யேகும் கியாமத்தில் வருவாரென்றார்.

(1041) எல்லா திக்ரிலும் வரிசையான
ஏற்றமுள்ள திக்ரு லாயிலாஹ
இல்லல்லா(ஹ்) வென்று சொன்னாரெங்கள்
இந்துதனை யிந்தப் புவியழைத்தோர்.

(1042) அவ்வல் கலாமு மாகிர்கலாமு
மாககலிமாவா யிருந்தாரெனில்
செவ்வல்லாப் பிழை அல்பாயிரம்
செய்தாலு மிறை பொறுப்பானென்றார்.

(1043) உங்களுடனுக்கு ஜகாத்தாவது
உண்மைக் கலிமத்து தஹ்லீலென்றும்
தங்கநிறத்திலும் துலக்கமான
சங்கை முஹம்மது சாற்றினரே.

(1044) கலிமாதஹ்லீலென் கோட்டை யென்றும்
கருத்தாயதில் புகுந்தோர்க ளெந்தன்
அலமாம் அதாபை விட்டகல்வாரென
ஆதி யுரைத்தா னென்றி றஸூல்சொன்னார்.

(1045) எழுபதாயிரம் கலிமா தன்னை
வினிதாகச் சொன்ன பேர்களுக்கு
தெளிவாய் எரி ஹறாமாகுமென
சிர்ரும் இர்ஷாதிலிமா முரைத்தார்.

(1046) லாஇலாஹ இல்லல்லா (ஹ்) வென்று
நலமாய் மிகச் சொல்வோர் தங்களுக்கு
தூய இறை குளி விறட்சிதனை
தூரப்படுத்துவானென உரைத்தார்.

(1047) மவ்தின்போதிலும் குளிதன்னிலும்
மறும்ம தனிலுமிம்மொழி சொன்னோர்க்கு
மல்லா விறட்சி யுண்டாக்கானென
வள்ளல் நபியுல்லாஹ் வாய் மலர்ந்தார்.

(1048) கடலினுரை போலே பிழையுண்டாலும்
கத்தாதனை நாடிக் கலிமா சொன்னால்
உடையோன் இவன் பிழையடங்கலையும்
உகப்பாய் பொறுப்பா னென்றுரிறஸூல்.

(1049) ஊணிலுவப்பும் நித்திரை யுவப்பும்
உண்டான பாவத்தின் னுவப்பும்
வேணு மிவை என யுகந்திருந்தால்
வேண்டு மனம் கல்நெஞ் சாகுமென்றார்.

(1050) உருக்குங்கோ உண்டவ ஜீவனத்தை
உடையோன் விதிந்ததோர் தொழுகை கொண்டு
தரிக்க உறங்கினீ ராகிலுங்கள்
சங்கை மனம் கல்நெஞ் சாகுமென்றார்.

(1051) எல்லா மனிதரி லேற்றமானோர்
இறையோ னிடத்திலே மனிதருக்கு
நலப்பிரோசனம் மிகுதி செய்யும்
நன்மையுள மாந்த ராகுமென்றார்.

(1052) இருவர் தம்மை யுறவாக்கவென்று
எழுந்து உரைபேசி யுறவாக்கினல்
கருதி யுரைத்திட்ட உரையொன்றுக்கு
கழுத்தினுருமைப் பேறுண்டா மென்றார்.

(1053) அநியாயக்கார சுல்தானுக்கு
யாரும் ஒத்தாசை செய்தார்களாய்
முனிவான ஹாமான் காரூனுடன்
முடுகும் தோழமா ராகுமென்றார்.

(1054) அழகாய் வுழுச்செய்து தொழுது கொண்டால்
ஆகாப்பிழை யெல்லாம் ஆதி நாயன்
தெளிவாய்ப் பொறுப்பா னென்றுரைத்தா ரெங்கள்
சீனத்துள வதனுடைய நபி.

(1055) வெள்ளிக்கிழமையில் ஜமாஅத்துடன்
விரைந்து பஜ்ற் தனைத்தொழுவதுபோல்
தெள்ளிதாம் தவமில்லையென
செருப்போடறுஷினிற் சென்றோர் சொன்னார்.

(1056) சதகாதனைக்கொண்டு மிஸ்கீன்கள்க்கு
தவனமாய் நீங்கள் கொடுங்கோளென
பதுமம் சதகாக்கள் மிகுதிசெய்யும்
பார முஹம்மது நபியோதினார்.

(1057) இரப்பர்தனைப் பேறு கெடுத்துவிட்டோர்
இல்லந்தனி லும்பர் எழு நாளாய்
விருப்பமுடன் புகுதாரெனவே
விழியின் குருடைத் தீர்த்தோருரைத்தார்.

(1058) பற்று தொழுதபின் குல்ஹுவல்லாஹ்
பதினோரு முறையோதி வந்தால்
திறமாக ஜன்னதெனும் பதியில்
சீமான் புகுதிவிப்பானே யென்றார்.

(1059) வரிசை மிகவுள்ள இக்லாஸெனும்
வண்மையுள சூரத் ததனை யாரும்
பிரிசமாய் மூன்று முறை யோதினால்
புர்கான் முகித்த பேறுண்டா மென்றார்.

(1060) இறக்கமனமின்றி கடன்பட்டோர்கள்
இளிம்பான கள்ளராகுமென
பொறுக்கும் குணமுள்ள நபி இறஸூல்
பிரிசமுளயாரோ டுரைக்கலுற்றார்.

(1061) போனநாளிலும் இருக்கின்றநாள்
பொல்லாதஷர்ரு யிருந்தாலவன்
ஈனமிகஉள்ள லஃனத்திலே
இருக்கிறுனென நபியோதினுர்.

(1062) புத்தியணுகாத அஹ்மக்கென்போன்
பொல்லாங் கவன்தனேப் பின்துடர்ந்து
வெற்றி அமல்விட்டு மேலோன்பக்கல்
விரும்பி இருப்பவனுகு மென்ருர்.

(1063) மனிதர்தனே நாடாதிருக்குமது
வண்மையுள சீமான்தானெனவே
இனியஉரைபேசும் நபி இறஸூல்
இயம்பினுர் யார்கள் தங்களுக்கு.

(1064) பீஸபீல்தனில் பட்டபேர்கள்
பிரிந்து மவ்த்தானே ரல்லஅவர்
வாசமுள இறை பக்கலிலே
வாணுளுடையோ ரென்றுரைபேசினுர்.

(1065) அவர்களுயிரான அற்வாஹுகள்
அழகான சொர்க்கப் பக்ஷியுள்ளாய்
மவ்லா வருள்படி மரத்தின்கனி
வாசமாயுண்டு சுகிப்பாகுமே.

(1066) வாளின்நிழலின்கீழ் சுவர்க்கமென்றும்
மன்னர் முஹம்மதுந் நபி இறஸூல்
தோழன்மாருடன் சொன்னுரென
துய்ய உலமாக்கள் தொகுத்தனரே.

(1067) பீஸபீல்தனில் றஹ்மத்கது
பெருத்தபலாயான தய்ன்னின்றியே
தோசமடங்கற்கும் தெண்டமென
துய்ய நபி இறஸூலுரைத்தார்.

(1068) பட்டஉடன் ஹூறுலீன்கள் வந்து
பாங்காய் எதிர்கொண்டு சந்தோஷமாய்
கெட்டியாய் நடந்தேமபதி
கிருபையுடன் புகுவார் குணமாய்.

(1069) பீஸபீல் கடல்போலெனவும்
பிரிவான மற்ற அமல்களெல்லாம்
மோசமற ஊற்றுபோலெனவும்
மொழிந்தார் முஹம்மது நபி இறஸூல்.

(1070) வரிசை மிகவுள்ள பீஸபீலில்
வாறஹதீதின் மொழியால் செப்ப
அரிதாமிறைக்காக பட்டால் சொர்க்கம்
ஆகிறும்தன்னி லுண்டாமென்றார்.

(1071) வண்மையணுகாத காபிருடன்
வாளால் பொருது பட்டோர்களுடன்
உண்மையுள வெங்கள் நாயகனே
ஊன்றும் கியாமத்தி லெழுப்புவாயே.

(1072) ஈமான் தனக்குப்பின் ஏற்றமான
இனிய அமல்பீச பீலெனவே
கோமான் நபி யுரைத்தாரெனவே
குணமாய் அபூஹுறைறை ருவுரைத்தார்.

(1073) எழுபது ஆண்டாய் இல்லந்தனில்
இனிதாய் தவம்செய்து இருப்பதிலும்
எழுந்து திரிவது பீசபீலுக்
கேற்றமெனச் சொன்னாரி றஸூல்நபி.

(1074) மாற்றமணுகிய காபிர்கள்மேல்
வாளால் பொருதி நிற்போர்களுக்கு
ஏற்றமுள சொர்க்கம் விதியாமென
எங்கள் நபியுல்லாஹ் இயம்பினரே.

(1075) குருடு செவிடான குப்பாருடன்
கோபமாய் வெட்டி மரிப்பவர்க்கு
விருப்பமுள கூலி சொர்க்கமென
வேத உரையாக நபி கூறினர்.

(1076) மிஸ்கு மணமாக சோரையோடி
மேலானிறை பக்கல் சுஹதாக்கள்தான்
பிஷகின்றி வந்து வளக்குரைத்து
பிரிசமுடன் சொர்க்கம் புகுவரென்றார்.

(1977) மேலான சொர்க்கம் புகுந்தோர்களில்
மீளமனம் வைத்தோ ரில்லையென
கோலம்பெற ஷஹீதானோ ரன்றி
குன்றாப்பெரு வாழ்க்கை கண்டதினால்.

(1078) தாலந்தனில் வந்து காபிருடன்
சங்கையுடன் வெட்டிப் பொருதுபட
ஆல மமைத்தவன் பக்கலிலே
அவனிதனில்வர விடை கேள்ப்பரே.

(1079) ஐனுவுல் மருளிய்யாவெனும்
அழகான வல்லி புருஷனுடன்
மஃனு லவர்கிஸ்ஸா தன்னைக்கேட்டு
வாளால் பொருதுபட்டிருப்பீர்களே.

(1080) வரிசையுள பீஸபீல் தவாபை
வண்மையுடன் கேட்டு ஒருமடந்தை
பிரிஷமுடன் தலைமுடி அரிந்து
பீஸபீல் பரிசினை யணிந்தாள்.

(1081) பாயில்கிடந்து ஹால் மிகுதிபட்டு
பளீஹத் தணுகியே சாவதிலும்
காயம்தனைக்கொண்டு படையில் சாக
துடிந்தவரிசையால் ஏற்றமாமே.

(1082) பீசபீல் காரர் தனக்கொற்றுசை
பிரிசமுடன் செய்த பேர்களுக்கு
வாசமுள பீசபீலின் கூலி
வண்மையுடன் கிட்டு மெனவோதினார்.

(1083) ஹலாலாம் உடைமைகள் தேடுமதி
கருவிதனைக் கொண்டு பீஸபீலில்
கொலையால் படுவதற் கெதிராமென
கூறினாரெங்கள் நபி இறஸூல்.

(1084) கொடுத்த கொடைதனை மீளக்கேட்போர்
குத்தா ஞமலி தன்சத்தி தன்னை
அடுத்து அருந்தி டும்பரிசாமென
அழகாய் நபியுல்லாஹ் அருளிச் செய்தார்.

(1085) வேண்டாக் கருமங்கள் தனைவிரும்பி
மேதினிதனில் பராக்காகுதல்
ஆண்டானவன் தனை பிறக்கணித்த
அலாமத் தடையாள மாகுமென்றார்.

(1086) நாலு நூறுயிரம் திர்ஹம்
நலமாம் சதக்காக்க ளளிப்பதிலும்
மாலாலொரு வஸ்தை எளிதாய் கண்டு
வருடாதிருப்பது ஏற்ற மென்றார்.

(1087) நன்மை தனக்கு ஒத்தாசை செய்தோர்
நலமான நன்மை செய்தவர்போ
லுண்மை நபியுல்லாஹ் உரைத்தாரென
ஓசையுளயார்க ளுரைக்கலுற்றார்.

(1088) நாற்பது ஆண்டின் வணக்கத்திலும்
நன்மை விசாரமா யொருஸாஅத்தில்
கூர்ப்பாய் இருப்பது கைறுமென
குன்றை யழைப்பித்த நபி கூறினர்.

(1089) எந்தன் உம்மத்தின் வணக்கங்களில்
ஏற்றமுள வணக்கம்மாவது
அந்தமுள ஆதி வேதம்தனை
அன்பாக வோதி இருப்பதென்றார்.

(1090) புத்தி யணுகாத மாந்தருக்கு
போற்றலுள மார்க்கமில்லை யென்று
வெற்றி மிகவுள்ள நபியிறஸூல்
வேதமணி வாயால் விளம்பலுற்றார்.

(1091) உங்கள்தனில் நல்லார் குர்ஆனையோதி
உவப்பாய்ப் படிப்பித்துக் கொடுப்போரென
சங்கை நபியுல்லாஹ் உரைத்தாரென்று
சாற்றினு ரெங்கள் உலமாக்களே.

(1092) ஸுப்ஹு தொழுதபின் துயில் செய்வது
துய்ய இரணத்தை விலக்குமென
புவியோ ரடங்கட்கு மாசாய்வந்த
போற்றலுள நபி புகலலுற்றார்.

(1093) அழகுக் காபத்து பெருமை என்றும்
அமலுக் காபத்துச் சோம்பலென்றும்
மொழியு முரைக்குப் பொய் ஆபத்தென்றும்
முற்ஸற் கரசான நபியோதினூர்.

(1094) தலைமை யுடையோரில் நல்லபேர்கள்
சங்கை உலமாக்கள் பக்கல் வந்து
நலமாம் முறைகேட்டு அதன்படியே
நடக்கும் பேர்க ளென்றூரிறஸூல்.

(1095) சத்தாம் உலமாக்கள் சுல்தான்கள்பால்
தன்மையாய் வந்து இருப்பாரென
முத்தால் படையுண்ட நபியிறஸூல்
மொழிந்தார் மணிவாயால் தொனியாகவே.

(1096) ஸாலிஹான பெண் சாதியர்கள்
தண்மை துணியாவின் சரக்குதன்னில்
கோலம் பெறும் நல்ல சரக்காமென
கூறினூ ரெங்கள் நபிஇற்ஸூல்.

(1097) உங்கள் நாவைக் கொண்டலங்காரமாய்
உடையோன் குறுன் தன்னையோ துங்கோளென்
றெங்கள் நபியுல்லாஹ் வுரைத்தாரென
இயம்பினூ ரெங்கள் உலமாக்களே.

(1098) கவ்மாம் மனிதரில் மன்னரானோர்
கருத்தாய் எவர்கட்கும் கை கருமம்
தவனமாய்ச் செய்வோ ரெனவுரைத்தார்
சங்கை முஹம்மது நபி இறஸூல்.

(1099) கெஞ்சி இரப்பது ஆதி பக்கல்
கிருபையுள மூமின் இபாதத்தென்று
இஞ்சீல்தனில் வன்னிப்புடைய எங்கள்
ஏந்தல் நபியுல்லாஹ் இயம்பலுற்றூர்.

(1100) துன்யா விடக்கென்றும் அதை தேடுவோர்
தூய்மை யணுகாத நாய் எனவும்
தொனியா யுரை பேசும் நபிஇறஸூல்
சூழ்ந்த அஸ்ஹாபிமார்க் குரைத்தார்.

(1101) எளிய மிஸ்கீனை யுகக்குமது
வற்றமுள சொர்க்கத்திறவு கோலென்
றழகாம் நபியுல்லாஹ் உரைத்தாரென
அன்பா முலமாக்க வருளிச் செய்தார்.

(1102) போந்த மனிதர்கள் வந்தார்களாய்
பொருத்தமுடன் நீங்கள் ஆசரித்து
வாந்தமாய் இருங்கோ வெனவே
வரிசை நபியுல்லாஹ்வகுத் துரைத்தார்.

(1103) பேராம் இஸ்ம்தனி லாதிபக்கல்
பெருக உவப்பான இஸ்மாவது
சீரான அப்துல்லாஹ் என்பதும்
சிறப்பான அப்துர்றஹ்மானென்றார்.

(1104) வசைகேடு கொண்டு ஆபியத்தாய்
வண்மை யுடனிருந்தோர் முன் பிழை
பிசகின்றி தீருமென வுரைத்தார்
பிறைபோல் வதனுள்ள நபிஇறஸுல்.

(1105) கரும மடங்கலில் கைறும்நல்ல
கருமம் அத்லாக நடத்துவதென்
றருமை நபியுல்லாஹ் அமிர்த வாயால்
அழகாய் திருவுளம் பற்றினரே.

(1106) மிருக சாதியை போருக்கேவ
முறையல்லவென நபி விலக்கல்
திறமாகச் சொன்னாரென வுரைத்தார்
ஜீனத்துள தப்ஸீருடையோர்.

(1107) வரிசை நபி பெருநாள்த் தவத்தில்
வண்மை கிறுஅத்து தனக்கு முதல்
பிரிசமுடன் அவ்வல்றக் அத்தினில்
பேணி எழுதக்பீர் கட்டுவார்.

(1108) கருதி யுரைத்திடுவார் பிந்தின
கருணை றக்அத்தில் ஐமுறை யென்
றரிவைமார்களி லுவப்புடைய
ஆயிஷா வழகா யுரைத்தார்.

(1109) வரிசை இக்லாஸை தினமாகவே
வண்மையுடன் இரு நூறு முறை
கருதியுரைத்தாககால் ஐம்பதாண்டின்
கடிந்த பிழை யெல்லாம் கடன்தவிர

(1110) பெரியோன் பொறுப்பானென் றுரைத்தாரென
பிரிசமிகவுள்ள அனஸெனபவர்
துரிஸ்தா யுரைக்கலுற்று ரெனவே
துலங்கும் தப்ஸீரில் தொகுத்துரைத்தார்.

(1111) இந்த ஸூரத்தை தானுவந்து
இயல்பாய் நெறியுட னோதுவோர்க்கு
வந்தமிடிபாவந் தூரப்படும்
வாகாய் நடுத்தரமா யிருக்கும்.

(1112) உந்திபெரியோனை யொளிர்முறையில்
உள்ளச்சத்துட னிருந்தாராகில்
நந்தாமணியான தாவூதெனும்
நபிதன் கனதியை பெறுவாரென்றார்.

(1113) தன்னை யலங்கரித் துலகிலுள்ளோர்
தருமாயாசாரம் செய்துநிற்க
உன்னி மனதினல் கருத்துவைத்தோர்க்
கொய்லேகுடியாதி லஃனத்தென்றார்.

(1114) நரையைப்பிடுங்க வேண்டாமெனவே
நாளை கியாமத்தி லிலங்குமென்றும்
கரையாப் புகழுள்ள நபி இறஸூல்
கனிவாய் தனைக்கொண்டு மொழியலுற்றார்.

(1115) வரிசை குருன் ஆதிவசனமென்றும்
வல்லான் "படைப்பல்ல வென்றிறஸூல்
பிரிசமுடனோதி யுகப்பாகவே
பேணியதன்படி நடந்தாராகில்

(1116) உருசைப்பதியான சுவனலோகம்
உறுதியுடன் புகுவாரெனவே
அறுதிப்படியேதான் ஆணையிட்டு
அமிர்தத் திருவாயா லருளிச்செய்தார்.

(1117) வலதுகரம் கீழா யுறங்கும்போது
வண்மையுள குல்ஹூ வல்லாஹ்தன்னை
நலமாய் நூறுமட் டோதினாலும்
நறையான சொர்க்கம் புகுவரென்றார்.

(1118) ஆணின் அபங்கனை ஆண்பிறந்தோர்
அரிவை யபங்கனை அரிவையானோர்
காணவிலக்கென்றும் ஒரு கலையில்
காட்டிக்கிடக்கவும் ஹறாமாமென்றார்.

(1119) எவரும் எவர்தனை யுவந்திருந்தால்
யவ்மல் கியாமத்தி லவ்ருடனே
மவ்லா எழுப்புவா னெனவுரைத்தார்
மன்னர் முஹம்மது நபி இறஸூல்.

(1120) ஒருமைப்பாடுள்ள மிஸ்கீன்கட்கு
உவந்து கித்மத்து செய்க்கோளென
அருமை மணிவாயா லுரைத்தாரென
அண்ணல் அபூதர்தா வுரைத்தார்.

(1121) பர்ளுதனைப் பழுதாக்கி நப்ல்
பாங்காய் கொடுவந்தாலதை இறைவன்
திறமாம் பர்ளுக்கு நிகராகவே
சேர்ப்பானெனச் சொன்னார் சீமான் நபி

(1122) இருவர்தமை நட்புச் செய்தவர்க்கு
இறைவன் கொடுப்பான் ஒவ்வோர்மொழிக்கு
உரிமைப் பலன்போலென் றுரைத்தாரெங்கள்
உண்மை முஹம்மது நபி இறஸூல்.

(1123) மனிதர்தமை நட்புச் செய்கின்றது
வரிசை நபி பட்டமெனு மரத்தில்
கனதியுள கொப்பிலோர் கொப்பென
காவல் முஹம்மது நபியோதினார்.

(1124) தாழுங்கோ ஆதி உங்கள் தன்னை
தகுமா யுயர்த்துவான் தாட்சிகொண்டு
ஆளும் பெரியோனைப் பயப்படுதல்
அடியான் தனக்கிது ஏற்றமென்றார்.

(1125) தவசம் தனைக்கட்டி விற்போனையும்
தண்மைக் கொலை செய்வோர் தங்களையும்
மவ்லா இவர்களைச் சரியாகவே
வாகா யெழுப்புவானென ஓதினர்.

(1126) உன்னை விஷ்வதித்தோனளவில்
உண்மைய மானத்தை இறுப்பாயென்றும்
உன்னியுனைச் சதித்தோனை சதி
உறுதியுடன் செய்யாயெனவும் சொன்னார்.

(1127) வரிசை முஸ்லிம்கள் தவசவிலை
வாகாயுயர்த்தினோர் தனைப்பெரிதாய்
எரியும் நரகத்தி லதாபுசெய்ய
ஏகன்மேல் ஹக்காமென வுரைத்தார்.

(1128) நினைவுதனில் வருங்காரியங்கள்
நீதிபொறுப்பானென் றிறஸூல் நபி
கனதியுடன் சொன்னாரென வுரைத்தார்
கலைசேரபூ ஹுறைறு வென்பவர்.

(1129) ஈஸாநபி யின்றி மறியமின்றி
இம்மைதனில் பெறும்பாலகரை
கூசாதிப்லீஸு பிறக்கும்போது
குத்துவானென்றார் நபி இறஸூல்.

(1130) குத்திப்பிடித்ததாலப் பாலகன் தான்
குளறிகுரல்விட் டழுகிறானென்
றத்தமாகிய ஆதித்தனை
யழைத்த அஹ்மது நபியோதினர்.

(1131) பொழுது படுவானி லுதிக்கிறதும்
பொய்யனெனும் தஜ்ஜால் வெளியாவதும்
தெளிவாய் புவியில் நின்றொரு மிருகம்
திண்ணமுடனிவை வெளிப்பட்டுதாய்

(1132) *
மொழியும் தவ்பாவும் நிண்ணயமும்
மோசமறக் கூடாதென ஓதினர்.

---

* மேலேயுள்ள இருகண்ணிகள் அசலிலில்லை

(1133) காலமெனும் ஸமானடுத்த தாகில்
கனதியுள்ள மூமின் கனவுமனும்
கோலம்பெற பொய்யாகாதெனவே
கூறினரெங்கள் கோமான் நபி.

(1134) அழுத்தமனுகாத மிருகசாதி
அழகாம் மனிதர்போல் மவ்திறந்தால்
கொழுத்த தசைதின்ன மாட்டீரென
கூறினரெங்கள் குதாயிறஸூல்.

(1135) புத்தி மிகுத்தோர்க் ளாரெனவே
போற்றி நபிதமைக் கேட்டளவில்
வெற்றி மவ்தை நித்தம் நினைத்து
விரைந்து அமல்செய்வோ ராகுமென்றார்.

(1136) ஆணைதனையிட்டு நபி இறஸூல்
அருளினர் அல்பு வெட்டுவாளால்
காணதுணிக்குதல் சக்கராத்து
ஹாலுக்கெதிர் காணதென ஓதினர்.

(1137) சதிமுட்டுச்சாவு மூமினுக்கு
தருமானறுஹத் தாகுமென்றும்
பதியிலுள பாவியானேருக்கு
பாரச்சலிப்பாகுமென நவின்றார்.

(1138) செத்தோன் சிரம்தனை வானம்தனில்
சீராகனிவத்தால் புவியோர் வானோர்
சத்திகுலைந்து சாவாரெனவே
சங்கை முஹம்மது நபி சாற்றினர்.

(1139) சாவெனும் ஆழி கடலோர்துள்ளி
தரையிலுள மலைதனில் விழுந்தால்
தாவி எரிந்து அம்மலை யுருகி
சாம்பல் போலா மென்று ரிறஸூல்.

(1140) நனைவான பஞ்சில் சூரை முள்ளை
நாட்டி இழுத்தாற் போல்மவ் துடைஹால்
கனமாகக் கண்டேனென உரைத்தார்
கத்தா கலீல் இப்ருஹீம் நபி.

(1141) வரிசை நபி மவுத்தாகும் போது
வாகாயொரு தண்ணீர் கலயந்தனை
பிரியாதவர் பக்கல் வைத்திருந்து
பிறைபோல் வதனத்தில் தடவிக் கொண்டார்.

(1142) கலிமா ஷஹாதத்தை உரைத்திறந்தால்
கனகபதி சொர்க்கம் புகுவாரென
பெலமாய் நபி சொன்னாரென உரைத்தார்.
பெருமான் நபி மருமகன் உதுமான்.

(1143) சுவர்க்கந்தனைக் கொள்ளும் விலையாவது
துய்ய் கலிமத்துஷ ஹாதத்தென
துவர்க்கம்தனில் மயிலாயிருந்து
துய்யோன் தனைத் துதித்தோருரைத்தார்.

(1144) வரிசை மிகவுள்ள லாயிலாஹ
வண்மையுடன் இல்லல்லா(ஹ்) உரைத்து
பரிவாய் மவ்தானால் சுவர்க்கப்பதி
படைத்தோன ளிப்பானென்றார் ஹுதைபா.

(1145) லாயிலாஹ இல்லல்லாஹ் வென்று
நலமாம் கருத்தாக நவின்ற பேர்கள்
தூயபெரு நாயன் கோட்டையிலே
துய்தாய்ப் புகுந்தோ ரென்றி ரஸூல் சொன்னார்.

(1146) வரிசைக் கலிமாவைக் கருத்தாகவே
வண்மையுடன் சொன்ன மாந்தருக்கு
தெரியும் ககனவாய்த் திறபடியாம்
சிறப்பாமறு ஷின்கீழ் செல்வாரென்றார்.

(1147) ஜன்னத் தெனும்பதி ஹுறுல்யீனை
சிறப்பாய் மருகவே ஏற்பதாகும்
மின்னத்துள ஆதிரஹ்மத்தென
மேலாம் நபி சொன்னார் யார்களுடன்.

(1148) மவ்த்து அடுத்தோர்க்கு கலிமாதனை
வாகாய்ப் படிப்பித்துக் கொடுங் கோவென
ஸவ்த்தாலழகானோர் சொன்னாரென
சாற்றினா ரபூஸயீ தென்பவர்.

(1149) கப்று போலொரு வருத்தமான
கடிந்த அமளிகள் காணேனென
தவரு துரைபேசும் நபி இறஸூல்
சாற்றினு ரென்ருர் உலமாக்களே.

(1150) மனிதர்தனில் துனியா வாழ்க்கையை
வாகாய் நிகழ்ந்தோர்கள் தன்னுடலை
கனதிப் படுத்தாமல் கப்ர்க்காரரில்
கனஸ்திருந்தவ னுகுமென்ருர்.

(1151) அமளியடங்கலில் கடினமான
அமளியிருந்தது கப்றெனவே
உமறுமகள் ஹப்ஸாவை நிகாஹூ
உடையோன் வஹ்யதால் மொழிந்தோர் சொன்னர்.

(1152) குளியாம் கப்றறைவி தனம்விட்டு
குணமாய் கலாஸானுல் பின் கருமம்
எளிதாமென நபி யுரைத்தாரென்று
இப்னு அப்பான் மகனுதுமான் சொன்னர்.

(1153) செத்த மனிதரைக் கண்டு சலாம்
செப்பியுறுதி கொள்வீர்களென
வெற்றி நபி சொன்னுரென வுரைத்தார்
விருப்பமுள இப்னு முலைக்கதென்போர்.

(1154) இடிபோலிரு உம்பர் கப்றில் வந்து
இறந்தோன்தனைக் கேள்வி கேட்பாரென
படிவான்புக ழடங்காத நபி
பாங்குருடன் சொன்னர் பரிவாகவே.

(1155) பிறந்த கோலம்போல் கியாமத்து நாள்
பிரிந்து மவ்த்தானே ரெழுவார் வேர்வை
திறந்த விதழ்வாயிற் கடிவாளம்போல்
செருமிஇருக்குமென் றிறஸூல் சொன்னர்.

(1156) வாளின் தேசுபோல் மயிரிழைபோல்
வளைந்த பெரும்பாலமுண்டதிலே
நீழும் பெரும் தூண்டான் நெருப்பினுலே
நிற்குமதிற் செல்வார் நன்மைகொண்டே.

(1157) காற்றுப் போலவும் தேசிபோலும்
கடினமா யோடுவார் போலவும்
வேர்த்து நடப்பார்கள் சிலர் தவிழ்ந்து
விழுவார் குளறுவார் நரகிலென்றார்.

(1158) நன்மைதனையும் தின்மைதனையும்
நலமான மீஸான் தன்னில் வைத்து
தின்மை கனத்தாக்கா லெரிநரகில்
சீமானருள்படி புகுவரென்றார்.

(1159) எந்தன் கொடியின் கீழ் எல்லவரும்
ஏகனு பயத்தால் நிற்பாரென்றும்
அந்தமுள மண்டாட்டம் தனக்கு
ஆதி துவர்க்கமாய்த் தருவானென்றார்.

(1160) ஆதம் நபி இத்ரீஸு நபி
ஆஸர் இபுறாஹீம் நபியவரும்
நீதமுள நூஹு நபியவரும்
நெறியான மூஸாஈஸா நபி

(1161) தூதான நபிமார்களெல்லாம்
சூழும் கியாமத்திலென் கொடிக்கீழ்
நீதியருள்ப்படி நிற்பாரென
நிலவாய் கரியேறி வருவார் சொன்னார்.

(1162) கவ்தரெனும் குளம் நபிக்குண்டதில்
கனதியுள நல்லோர் ஓர்மிடரு
தவனமுடன் குடித்தால் தவனம்
தருமா யொருக்காலுமில்லை யென்றார்.

(1163) நட்சத்திரம்போல தன் கரையில்
நல்ல பசும் பொன்னால் வெள்ளியினால்
சொர்க்கத் தரளத்தால் மாணிக்கத்தால்
துலங்கும் கிண்ணங்களிருக்கு மென்றார்.

(1164) எழுப்தாயிரம் மலக்கும்பர்கள்
எரியும் நரகத்தை கியாமத்துநாள்
அழியானருள்ப்படி இழுப்பாரப்போ
தலறும் அவரெல்லாம் விழுவாரென்றார்.

(1165) ஜக்கூமெனும் மரம்தனிலோர் துளி
தரையில் வீழ்ந்தாக்கால் துன்யாவெல்லாம்
மிக்கநெருப்பாக அழியுமென
வேதாம்பரால நபி யோதினர்.

(1166) நரகர் தனக்கொரு தாகமுண்டாய்
நாயனளவிலே இரப்பார் கேட்பார்
உருகி யொலித்தோடும் கபாலம்தனை
ஊட்டை யோன்புகட்டுவான் குடலிளகி

(1167) பிரிந்து வெளியாகும் பின்புறத்தால்
பெருத்த தலையிலுண்டான மூளை
எரியாமல் கொதித்துக் கீழ்வீழுமென்
றீத்தங்குலை யழைத்தோருரைத்தார்.

(1168) நாகமுடன் தேளும் நட்டுவையும்
நரகம்தனிலுள்ள பூரங்களும்
வாகாய் வணங்காரைக் கடித்தால்நஞ்சு
வருஷமாக நின்றெரியு மென்றார்.

(1169) கொலைசெய்வோர் விணசெய்வோர் வட்டி
கொடுப்போர் வாங்குவோர் குறிகள்சொல்வோர்
நிலையாய் தொழாத பேர்சதக்காக் கொடார்
நெறியாக நோன்பு வையார் ஹஜ்ஜு

(1170) பிலமாகச் செய்யார் பீஸபீலில்
பிரிந்து புறங்காட்டி யோடினோர்கள்
அலையாப் பெரும் நாயன்மார்க்க நெறி
அகன்றோரடங்கல்க்கும் நரகமென்றார்.

(1171) மார்க்க நெறியாக நடந்தோருக்கு
வல்லான் சுவர்க்கத்தில் வகுத்த வாழ்வு
பார்க்கவிழியாலும் நாவினாலும்
பரிவாய் மனத்தாலும் தீராதென்றார்.

(1172) பதினலாம் பக்கல் நிலவுபோலாய்
பதிவாய் சுவர்க்கத்தில் வணக்கமுள்ளோர்
அதிக சுகங்களை யனுபவித்து
அச்சமணுகாமலிருப்ப ரென்றார்.

(1173) சிறுநீர் பெருநீர்கள் கக்கல்காறல்
சீயுமருவருப்பானவைகள்
குறியாமவர்களுக்கில்லை யென
கோமான் வஹிகொண்டு நபியோதினர்.

(1174) வேர்வையடங்கலும் கஸ்தூரியாம்
மேலினுள ஊத்தை சந்தனமாம்
கோர்வையுடன் முத்து மாணிக்கமும்
குன்றுப் பவளமும் பொன் வெள்ளியும்.

(1175) கார்போல் முடியுள்ள ஹூறுல் ஈன்கள்
கழுத்தி லலங்காரமா யணிந்து
சீராம் அரசரைத் திண்ணமுடன்
சேர்ந்தங்கிருப்ப ரென்றார் இறஸூல்.

(1176) எழுபது துகில் தன்னைவிட்டு
என்பினுள மூளைத்து லக்கமாக
தெளிவாய்த் தெரிந்திடும் அவர்கள் விரல்
தெரிந்தாற் புவி யெல்லாம் துலங்கிடுமே.

(1177) மாணிக்கம்போலும் தாளம்போலும்
வடிவா முடலுள்ள பேர்களென
பேணிக் கிருபையாய் இரணமீயும்
பெரியோன் குறுனுயத்தருளிச் செய்தான்.

(1178) அவ்வள் தின்முகம் வடுவாக்குமிந்தை
அல்லைப் பழிப்பாக்கு மவள்தன்குழல்
உவரினுள்ள முத்தைப் பழிக்கும் பல்லு
ஊன்றும் செருப்பின்கீழ் புவி வாழ்க்கையே.

(1179) தேனாற் மதுவாறுநெய் பாலாறு
சீராகவோடும் மேடைதோறும்
மானருடன் கூடி வாழ்ந்திருப்பார்
மாற்றமணுகாமல் ஊழிகாலம்.

(1180) மாணிக்கம் கொண்டும் முத்துக்கொண்டும்
மாடைதனைக் கொண்டும் வெள்ளிகொண்டும்
ஆணித்தரளங் கொண்டமைந்திருக்கும்
அழகா மாளிகை தனிலிருப்பார்.

(1181) தேடும் சுகமெல்லாம் ஹாளிருகும்
சிறப்பான சொர்க்கக் காவுதோறும்
பேடும் சேவல்போல் பொற்பட்சிகள்
பெரியோர்தனைப் போற்றி ராகம்பாடும்.

(1182) முத்தால் பவளத்தால் வெள்ளி பொன்னல்
மோகமுள மேடைதனில் சுகிக்க
வித்தாரமாக பொற் பறவை
விருப்பமுள ராகக்கவி பாடுமே.

(1183) காவுகள்தோறும் கிளி இனங்கள்
கலந்து விளையாடி ராகமாக
சாவும் மவ்த்தில்லா நாயகனை
சவ்த்தாய் புகழக் கேட்டிருப்பார்களே.

(1184) ஆதி லிகாவின்றி இவர்களுக்கு
அழகான ராஹத்தில்லை யென
நீதி நபி யுரைத்தாரெனவே
நிகழ்த்தினர் நெறியானயார்கள்.

(1185) தெளிவா யொளிவான தேசிலேறி
சிறப்பாம் பெருநாயன் தன்னைக் கண்டு
அழியாப் பதிசொர்க்கம் தன்னில் மீண்டு
அரம்பைமாருடன் சுகிப்பார்களே.

(1186) சொர்க்கம்தனிலுள்ளப் பெருமிதங்கள்
சொல்ல வரிதாகும் மட்டொண்ணது
சக்கின்றிதறை வாழ்க்கையெல்லாம்
தாவணி நூலுக்கெதிரல்லவே.

(1187) தீனில் நெறியாக நடந்த நல்லோர்
சேர்வது சொர்க்கம் பொல்லாத பேர்
ஈன மணுகிய நாற்றமுள்ள
எரியில் புகுவது இதுதிடனே.

(1188) ஆதி பெரியோனே தம்பிரானே
அழலாம் நரகை விட்டெங்கள் தம்மை
சாதி முஸ்லிம்கள் அனைவரையும்
சங்கைப் பதிசொர்க்கம் சேர்ப்பாயாமீன்.

(1189) உரைத்த படியமல் செய்திருக்க
உகப்பாம் கருத்தளி என் தனக்கு
பெருத்த பிழை யெல்லா மழித்து என்னை
பெருமான் நபியுடன் சேர்ப்பா யாமீன்.

(1190) வரிசை நபி ஹதீதின் மாலையை
வாகுபெற முகித்தேன் வெள்ளிரா
பிரிசமுள்ள ஹஜ்ஜின் மாதம் மூன்றில்
பேணும் ஹிஜ்ராத்து எண்பத்தாறில்

(1191) அரிய பெருநாயன் புகழ்ச்சி கொண்டும்
அழகாம் நபி சலவாத்து கொண்டும்
அரிய உலமாக்க ளருளிச் செய்தார்
ஆமீன் ஆமீன்யா றப்பல் ஆலமீன்.



ஹிலால் பிரஸ், திருநெல்வேலி–5-'49.

# பிழை — திருத்தம்

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 37 | கான்டி | தாண்டி |
| 37 | 285 | வீடாவாது | வீடாவது |
| 40 | 309 | யுல்லார் | யுல்லாஹ்ர |
| 43 | 337 | பேல | பெல |
| 77 | 612 | ைத்ஷதான்களே | ஷைத்தான்களே |
| 80 | 631 | விளகி | விலகி |
| 81 | 644 | மென | மென் |
| 82 | 645 | இணக்க | றிணக்க |
| 88 | 694 | கறை | கரை |
| 88 | 696 | தளில் | தனில் |
| 90 | 715 | முஸி | முஸீ |
| 91 | 721 | தாள் | தான் |
| 94 | 747 | தாக்கல் | தாக்கால் |
| 95 | 751 | மூஹ | முஹ |
| 95 | 756 | காளெ | காரெ |
| 97 | 770 | யாள | யான |
| 102 | 812 | நாயஞனை | நாயஞனோ |
| 103 | 814 | தூரூயி | றூரூயி |
| 103 | 815 | தவன் | தவள் |
| 104 | 826 | தயார் | தாயார் |
| 108 | 857 | ஜாமா | ஜமா |
| 108 | 859 | லானி | லாளி |
| 110 | 869 | அத்தி | அந்தி |
| 110 | 874 | சதாகா | சதகா |
| 111 | 877 | ஈன | [illegible] |
| 113 | 894 | யெனும் | [illegible] |
| 115 | 916 | தன்மை | தண்மை |